*MADRAS SCHOOL SERIES.*



# SECOND FORM READER,

## TAMIL.

## இரண்டாம் பார புத்தகம்.



*Authorized by the Director of Public Instruction.*

**First Edition, 10,000 Copies.**

Madras:

PUBLISHED BY THE EMPRESS OF INDIA PRESS,

*Popham's Broadway, Black Town.*

1895.

MADRAS SCHOOL SERIES.



# SECOND FORM READER,

## TAMIL.

## இரண்டாம் பாட புத்தகம்.

AUTHORIZED BY THE DIRECTOR OF PUBLIC INSTRUCTION.

First Edition, 10,000 Copies.

Madras:

PUBLISHED BY THE

EMPRESS OF INDIA PRESS, POPHAM'S BROADWAY, BLACK TOWN.

1895.

# CONTENTS.

# அட்டவணை.



# இரண்டாம் பார புத்தகம்.

## 1. தற்பயிற்சி.

உலகத்தில் ஒவ்வொரு மனிதனுக்கும் இருவிதமான கல்விகளுண்டு. பிறர் கற்பித்துக்கொடுப்பதனால் உண்டாவதொன்று, தானே பயிற்சிசெய்து கற்றுக்கொள்வது மற்றொன்று. இவ்விரண்டினுள் பின்னது மிகவும் சிறப்பானது. கற்றுக்கொடுத்த சொல்லும் கட்டிக்கொடுத்த சோறும் துணையாகா.

“ஒவ்வொருவன் கற்கிற கல்வியிலும் தற்பயிற்சியினால், அதாவது பிறருதவியின்றித் தானே பயிலுதலினால், கற்பித்துக்கொள்ளுகிற கல்வியே மிகவும் சிறந்தது” என்று ஸர் வால்டர் ஸ்காட் என்பவர் சொல்லியிருக்கிறார். மற்றொருகனவான் மேற்சொல்லிய வாக்கியத்தை அடிக்கடி நினைத்துக்கொண்டு ஆனந்தமடைவதுமல்லாமல், தன் தொழிலைச்சேர்ந்த வித்தைகளையெல்லாம் சுயமாய்க் கற்றுக்கொண்டதற்காகத் தன்னைத்தானே வாழ்த்திக்கொள்வது வழக்கமாம். உலகத்தில் பாஷையிலாயினும், சாஸ்

திரத்திலாயினும், இன்னும் மற்ற வித்தைகளிலாயினும் நன்றாய்த் தேர்ச்சிபெற்றவர்க ளெல்லாம் முக்கியமாய்த் தற்பயிற்சியால் தேறினவர்கள்தாம். நாம் சாதாரண பாட சாலைகளிலும் சாஸ்திர பாடசாலைகளிலும் படிக்கிற படிப் பெல்லாம் பிரதமசிக்ஷையாகவேயிருக்கின்றன. அவை எவ்வளவுதூரம் நமது மனதைப் பண்படுத்தி ஓயாமல் படிப்பிலேயே செல்லும்படி பழக்குகின்றனவோ, அவ்வ ளவுதான் அவைகளுக்குள்ள சிறப்பு. பிறர் கற்றுக்கொ டுத்த கல்வி, நாமே நமது புத்தியெல்லாம் ஒரேமுகமாய்ச் செலுத்தி ஓயாமல் வருந்திக் கற்கிறகல்விக்குத் தினையள வும் ஈடாகாது. நாம் நமது உழைப்பினாலேயே கற்றுக் கைக்கொண்ட கல்வி, முழுதும் நமக்கே உரியதும் ஒரு நாளும் அழிவில்லாததுமான ஒரு ஆஸ்திபோலாய்விடும். அப்படிச் சம்பாதிக்கிற கல்வி நிலைபெற்று நமது புத்திக்கு மேன்மேலும் கூர்மையும் தரும். நாமே வருந்திக் கற்கிற விஷயங்கள் நம்மனதில் எவ்வளவு உறுதியாய்ப் பதியுமோ அவ்வளவு உறுதியாய், பிறருதவியைக் கொண்டு கற்கிற விஷயங்கள் ஒருபோதும் பதியமாட்டா. நாமே வருந்திச் செய்யும் உழைப்பினால் புத்திக்கு நல்ல உறுதியும் சாமர்த் தியமுமுண்டாகும். சுயமாய்வருந்தி ஒருதடவை ஒரு கடினவிஷயத்தைக் கண்டறிவோமானால் பிறகு அது அத் தன்மையான மற்றொரு விஷயத்தை எளிதில் அறிவதற் குரிய சக்தியைத் தானே உண்டாக்கும். இவ்வண்ணம் கல்வியறிவானது புதிதாய்ப் பல தத்துவங்களைக் கண்டறி யவும், கடினமான விஷயங்களை எளிதில் அறிந்துகொள்ள வும் நமக்கு மிகுந்த வல்லமையுண்டாக்குவதுபற்றி, அது வே ஒரு நூதனமான மனோபலமாக விளங்குகின்றது. காரியசித்தி பெறுவதற்கு நம்முடைய விடாமுயற்சியே முக்கியசாதனம். அதில்லாமல் எவ்வளவு புத்தகமிருக்

கட்டும், எவ்வளவு உபாத்தியாயர்களிருக்கட்டும், எவ்வளவு விஷயங்கள் முகபாடமாயிருக்கட்டும், இன்னும் எந்தெந்தத் துணைக்கருவிகளிருக்கட்டும், ஒன்றும் பயன் படாது.

தற்பயிற்சி செய்வதாலும், ஸ்வபுத்தியையே அதிகமாக உபயோகப்படுத்தி விசேஷமாய் அறிவுபெறும்படி மாணுக்கர்களைத் தூண்டுவதனுலும் வெகு நன்மையுண்டாகுமென்பதை, நன்ருய்க் கற்றுத்தேர்ந்த உபாத்தியாயர்கள், சந்தேகமில்லாமல் அங்கீகரித்திருக்கிருர்கள்; பிள்ளைகளுக்கு எழுத்தெழுத்தாய்ச் சொல்லிக்கொடுப்பதைவிட, அவர்களுக்குப் படிக்கவேண்டிய வழியைக் காட்டி, எடுத்த கருமத்தை அவர்களுடைய முயற்சியைக்கொண்டே முடிக்கும்படி செய்வதிலேயே அவர்களுக்கு நோக்கம் அதிகம். அதனுல், கற்பித்தலாவது துண்டுதுண்டாகவும் பகுதிபகுதியாகவும் அறிவைப் புகட்டுவதேயன்று; இவற்றிலும் மிகச் சிறந்த ஒருவகைப் போதனையே என விளக்கியிருக்கின்றனர். ஆர்னுல்டு என்ற சிறப்புப்பெற்ற பாலபோதகர் உழைத்ததெல்லாம் இந்தத் துறையிலே தான்: தாமே தமக்குத் துணையாகித் தம்முயற்சியாலேயே தமது புத்தியை மலரச்செய்துகொள்ளும்படியாகத் தம் மாணுக்கருக்கு வழிகாட்டப் பாடுபட்டார்; அவர் அவர்கட்குச்செய்த உதவியெல்லாம், அவர்கள் நடப்பதற்கு ஏற்றவழிகாட்டி, அதேவழியில் நடக்கும்படி அவர்களைத் தூண்டி மேன்மேலும் உற்சாகப்படுத்திவந்ததுமாத்திரமேயாம்.

இப்புத்தகத்தில் எழுதப் போதுமான இடமிருந்தால், இவ்வாறு தற்பயிற்சிசெய்து தாழ்ந்தநிலையிலிருந்து பாஷைகளிலும் சாஸ்திரங்களிலும் பேர்பெற்று மேன்மை

யடைந்ததற்கு அநேகம் உதாரணங்கள் எடுத்துக்காட்ட லாம். இவ்வகையான உதாரணங்களால் புத்திப்பயிற்சிக் குத் தேகப்பயிற்சி இன்றியமையாத் துணைக்காரணமென்ப தும் தெளிவாய்த் தெரியவரும். மிதமாய் வேலைசெய்தல் சவுக்கியத்திற்கு அனுகூலமாயிருப்பதுமன்றி இம்மனித தேஹத்திற்கு மிகவும் ஏற்றதாயும் இருக்கின்றது. படிப்பு மனதைப் பண்படுத்துவதுபோலவே, உழைப்புச் சரீரத் தைப் பண்படுத்துகின்றது. மேலும் ஒரு தேசத்தில் ஓய்ந் திருப்பவர்களுக்கு உழைப்பும், உழைப்பவர்களுக்கு ஓய் வும் அமையும்படியாகவே யாவரும் 'வாழவேண்டும்; அப் படி வாழ்கின்ற வாழ்வே குடிகளுக்கு ஏற்றமான வாழ் வெனத்தகும்.

## 2. அரசனைப்போலச் சுகமாயிருத்தல்.

"அரசனைப்போலச் சுகமாயிருத்தல்" என்கிற வாக் கியத்தை நீ கேள்வியுற்றதுண்டா? பலதடவை கேட்டி ருக்கலாம். அப்படி அரசனுடைய சௌக்கியம் அநே கர்க்கு அமைந்திருப்பினும், அது கவலையற்ற சௌக்கிய மாயிருக்கு மென்பது நிச்சயமில்லையென எப்பொழுதா யினும் உனக்குத் தோன்றியிருக்குமா?

மாணிக்கமென்ற ஒரு சிறுபையன் தன் சிற்றப்பனு டைய சிங்காரத் தோட்டத்துக்குப் போய் உலாவித்திரிந் து, அந்தத் தோட்டக்காரன் தந்த ஒரு செவ்வாழைப் பழச்சீப்பைப் பெற்றுக்கொண்டு வெளியே வந்து, நின்ற என்னைப் பார்த்து அதிக சந்தோஷத்துடன் "சுந்தரம், நான் அரசனைப்போலக் களிப்புற்றிருக்கிறேன்" எனப் புகன்றான்.

சுந்தரம்: "என் அருமை மாணிக்கமே! எதைப்பற்றி நீ அப்படிச் சொல்லுகிறாய்? அரசரெல்லாம் களிப்புற்றிருப்பதாகவா நினைக்கிறாய்?"

மாணிக்கம்: "ஆம் நான் அப்படித்தான் நினைக்கிறேன். அரசன் தன் முடியில் அழகான கிரீடந் தரித்திருக்கிறான், அவனுக்கு ஏறிச்செல்ல நல்ல வண்டிகளும் குதிரைகளும் இருக்கின்றன; யாவரும் அவனுக்குக் கீழ்ப்படிந்திருக்கிறார்கள். மேலும் அவன் தனக்கு இஷ்டமானபடி நடக்கக்கூடும். இப்படி இருப்பது எத்தனை மேன்மையானது!"

சுந்தரம்: "மாணிக்கம்! நீ சொல்லியவையெல்லாம் சரியே; இவைகளோடுகூடப் பலவித சங்கடங்களுமிருக்கின்றனவே. நீ ஒரு அரசனாகவும் உன் முடியில் ஒரு கிரீடம் இருப்பதாகவும் எண்ணிக்கொள். அந்தக் கிரீடத்தைக் கைப்பற்றுவதற்கு ஒருவன் சமயம் பார்த்துக்கொண்டே இருப்பானாயின் அப்பொழுது உனக்கு எவ்விதமாய் இருக்கும்."

மாணிக்கம்: "அது எனக்குச் சிறிதும் விருப்பமாயிராது; கிரீடத்தைக் கைப்பற்றுவதற்கு இடங்கொடாமல் காத்துக்கொள்வேன்."

சுந்தரம்: "ஆம், மெய்தான்; அப்படி எதிரி ஒருவன் இருக்கிறானென்பதை நினைக்க, தீராத்துயரமாவது மனக்கவலையாவது உண்டாகாதா?"

மாணிக்கம்: "ஆம், மிகக் கவலை உண்டாகும்."

சுந்தரம்: "இதைப்போல் அரசருக்குப் பல கவலைகள் உண்டு; நல்ல வண்டிகளாலும் குதிரைகளாலும் அந்தக்

கவலை நீங்கத்தக்கதன்று. மேலும் அவற்ருல் உண்டா கும் சந்தோஷத்தைப்பார்க்கிலும் குடிகளை ஆள்வதிலுண் டாகும் கவலை அநேகமடங்கு அதிகமாயிருக்கும். அவர் கள் இஷ்டப்படி யிருக்கலாமென்கிருயோ? அதுவுமில்லை; சாதாரண மனிதர்களில் அநேகருக்கிருக்கிற சுதந்தரம் கூட அவர்களுக்குக் கிடைக்காது. குடிகள் யாவருக்கும் நல்லவனுக நடப்பது மிகக் கடினமெனக் கண்டு வருந்து வார்கள்.''

**மாணிக்கம்:** ''நான் இதுவரைக்கும் இவைகளைப்பற்றி யோசித்ததில்லை; அப்படி அரசனுகாமலிருப்பதற்காக இப்பொழுது சந்தோஷப்படுகிறேன்.''

**சுந்தரம்:** ''நீ ஒரு சிறுபிள்ளை, சௌக்கியமாயிருக் கிருய், தேகத்தில் பலமிருக்கின்றது, தாய்தந்தையர்கள் உன்னிடத்தில் பிரியமாயிருக்கிருர்கள். உன் வீட்டில் யாதொரு குறைவுமில்லை. இது அரசனுடைய நிலைமை யிலும் மேலானது. கடவுள் உன்னைப் படைத்த நிலைமை யோடு திருப்தியடைந்து, அவர் செய்வதெல்லாம் உன் னுடைய நன்மைக்காகவே என்று நம்பியிருந்தால், அது வே போதும். உனக்கு ஒரு சிறுகதை சொல்லுகிறேன். அதைக் கேட்பாயாகில் இதுவரைக்கும் நான் சொன்ன தெல்லாம் உன் மனதில் நன்ருய்ப் பதியும்.''

சில காலத்துக்குமுன் இரண்டு குருவிகள் ஒரு கூடு கட்டி வருடந்தோறும் குஞ்சுபொரித்து ஒருவராலும் வருத்தப்படாமல் வாழ்ந்திருந்தன. வேனிற்காலத்தில் அவைகளுக்குப் போதுமான தீனி அகப்பட்டும், மாரிக் காலத்தில் சமீபத்திலிருந்த ஒரு பெரிய வீட்டின் சாள ரத்தண்டை போய் அவ்வீட்டுக் குழந்தைகள் அன்புடன்

அளிக்கும் பருக்கைகளைப் பொறுக்கித் தின்றுவிட்டு வரும். இது அவைகட்குச் சுகஜீவனமே. இவ்விதமாக அக்குருவிகள் சிலகாலம் திருப்தியடைந்து சுகமாயிருந்தன. இவ்வாறிருக்க இறுதியில் ஆண்குருவி தான் நின்ற நிலைமையில் திருப்தியடையாமல் மனக்கவலைகொண்டு தன் விதியை வெறுக்கலாயிற்று:—எவ்விதமெனில்,

அண்டையில் ஒரு வயற்புறத்திலிருந்து செருக்காய் எழுந்த கவுதாரியைக் கண்டு பெருமூச்செறிந்து, ஆ! நான் இப்படி ஒரு அழகிய பறவையாய்ப் பிறந்திலேனே! என்னை மதிப்பவர் உலகில் எவருமில்லையே; இப்பறவையோ காண்போர் எவரும் கொண்டாடத்தக்கதாயிருக்கின்றதே என்று குறைகூறிற்று.

இக்கடைசியான சொற்கள் அதன் வாய்விட்டு வெளி வருவதற்கு முன்னமே துப்பாக்கி ஓசை கேட்டது. உடனே கவுதாரி கண்சுழன்று கீழே விழுந்து இறந்தது.

அதுகண்டு அக்குருவி திடுக்கிட்டு அவ்விடம் விட்டுக் கிளம்பி அம்புபோலப் பறந்து போகையில், ‘இவ்வகைப் பெரிய பக்ஷிகளுக்குப் பல அபாயங்கள் உள; நம்மைப் போன்ற சிறு பறவைகளுக்கு அவை சம்பவிப்பது அருமை; ஆதலால், நான் சாதாரணமான ஒரு சிறுகுருவியென்று விசனப்படலாகாது’ என்று அறிந்துகொண்டது.

கூட்டுக்குப் பறந்துபோம்போது வழியில் அப்பறவை இளைப்பாறுவதற்காக ஒரு மரத்தின்மீது உட்கார, அம்மரத்தின்கீழ் ஒரு கோழிக்கூண்டும் சில கோழிகளும் இருக்கக்கண்டது. அந்தக் கோழிகள் உலாவித்திரிவதையும், அவைகட்கு உணவாக ஒரு சிறு பெண் மடியிலிருந்து

நென்மணி இறைப்பதையும் அக்குருவி கண்ணுற்று, இதோ! இவைகளின் பிழைப்பு சுகமான பிழைப்புதான். இந்தக் கோழிகளுக்கு யாதொரு விசாரமுமில்லை: போட்டதீனியைத் தின்றுவிட்டுக் கவலையற்றிருக்கின்றன. நானே அலைந்து திரிந்து இரை சம்பாதிக்கிறேன்; மாரிக்காலத்தில்மாத்திரம் சொற்ப உதவி கிடைக்கின்றது; நாம் வீட்டுக்கோழியாயிருந்தால் எவ்வளவு சுகமாயிருக்கலாம் என மனோராஜ்யம் செய்துகொண்டிருந்தது.

இவ்வாறு அக்குருவி எண்ணமிடுகையில், ஒரு பெட்டைக்கோழி மரத்தில் உட்காருவதற்காகச் சற்று மேலே பறந்து, பின்பு பறக்கமுடியாமல் அலறிக்கொண்டு கீழே விழ்ந்தது. அதுகண்டு குருவி இதென்னவென்று ஆச்சரியமடைந்து உற்றுப்பார்த்து, பெட்டைக்கோழியின் சிறகு ஒடிந்திருக்கின்றதெனவும், அதினால் அதற்கு இரண்டொரு கஜத்துக்குமேல் அதிக உயரம் பறக்கச் சக்தியில்லையெனவும் தெரிந்துகொண்டது.

இவைகளையெல்லாம் கண்ட குருவி தனது வீணான எண்ணத்தைத் தானே வெறுத்துக்கொண்டு, "போதுமென்றமனமே பொன்செய்யுமருந்து" என, உள்ளதைக் கொண்டு திருப்தியடைந்திராமல் நான் மதிகெட்டு என்னென்னவோ யோசிக்கலானேன். எவ்வளவு உணவு இருந்தால்தான் என்ன? விரைவாய்ப் பறக்கக்கூடிய சிறகுகளை இழக்கலாமா? இனிநான் எப்பொழுதும் மற்றப் பறவைகளைக் கண்டு பொறுமைப்படுவதில்லை; பதவி உயர்ந்தால் அதற்கேற்றபடி பாடும் அதிகமாகும். என் மட்டில் மேலானபதவியை இழந்தாகிலும் கவலையற்றிருக்கவே நான் விருப்பமுடையவனாகிறேன் என்றது.

# 3. தர்மகுணம்.

தர்மகுணத்தின் உண்மையான சொரூபம் இத்தன்மையதென்பதை இக்காலத்தில் வெகுவாய் எவரும் மறந்து, இரப்போர்க்கு ஐயமிடுவதே தர்மமெனக் கருதியிருக்கின்றனர்; எந்தநோக்கத்தோடு பிறர்க்குப் பிச்சைபோடுகின்றனரோ அதைச் சற்றும் ஆலோசிப்பதில்லை. தர்மகுணமானது அவரவருடைய செய்கையினாலேயே வெளிப்படுகின்றதாயினும், வாஸ்தவத்தில் அது உள்ளத்தில் அமைந்திருக்கும் ஓர் நற்குணமேயன்றி செய்கையன்று. நம் அயலகத்தார் தர்மகுணமுள்ளவர்களா அல்லவா என்பதை நாம்எளிதில் அறிந்துகொள்ளக்கூடுமாயினும், தர்மகுணம் இத்தன்மையதென வரையறுத்துக் கூறுவது கடினமாயிருக்கின்றது.

தர்மகுணமானது பிறரிடத்திலுள்ள யோக்கியதையை நாடி நச்சி அறியும் இயற்கையுள்ளது. கண்ணானது தன் இயற்கைக்கு ஏற்றபடியே பிறபொருளைக் காணமாட்டும்; அவ்வண்ணமே நமது மனமும் தன்னைப்போலவே பிறரையும் மதிக்கின்றது. தர்மகுணமுள்ளவன் பிறருடைய குணங்களையும் நன்குமதித்து வருவான். செய்கையில் தவறுதல், இரண்டுபொருள்படப் பேசுதல், இத்தன்மையான நடைபாவனை முதலிய வெளித்தோற்றங்கள் அவரவருடைய நற்குணங்களுக்கு விரோதமாகவே காணப்பட்டாலும், அது வெளிப்படையாய்த் தெளிவாகின்றவரையில் தர்மகுணமுள்ளவன் அவர்களிடத்தில் ஒருபோதும் குற்றத்தை நினையான். தர்மகுணமுள்ளவன் மிகத் தீயநடக்கையுடையோனிடத்திலும் நன்மையின் வித்துக்களிருக்கக் கண்டு அவை முளைத்துத் தழைத்தோங்குமாறு அவனை

உற்சாகப்படுத்திவருவான், தர்மகுணமற்றவனோ பிறருடைய செய்கை சொல் எல்லாவற்றையும் தீயவையாகவே பாவித்து, அவரிடத்தில் மேன்மேலும் தீமைகளை விருத்தியடையச் செய்வான். நமக்கு நன்மைகளையே நாடுகின்ற நல்லாரோடு இணங்கியிருப்போமாயின், அவர்கள் எண்ணுவதுபோலவே நாம் நற்குணமுள்ளவராய் இருக்க வேண்டுமென முயல்கிறோம்; அப்படியின்றி அயல்வீட்டுக்காரர்கள் நம்மைப்பற்றித் தீயவைகளைப் பேசுகின்றவராயிருப்பார்களாயின், நாம் அதிகமாய்த் தீயவழியிற் செல்ல மனந்துணியாதிருந்தாலும், ஒருவாறு அவர்களை வெறுப்பதாகிய இழிதொழில் செய்யும்படியாவது சம்பவிக்கும். இது அனைவர்க்கும் தெளிவாய்த் தெரிந்தவிஷயமே. ஆதலின் நாம் பரஸ்பரம் மனதிலேகூட அதர்மமான எண்ணங்கொள்ளாமல் அதிகஜாக்கிரதையாய் இருப்பது மிகவும் அவசியமானது.

பிறர்மனம் நோவாதபடி அவர்க்கு இதமாக நடந்துகொள்வதும் தர்மத்தில் சேர்ந்ததுதான். நமக்கு யாராவது ஒரு தீங்குசெய்தால், உடனே அவர்க்கு ஒரு தீமையாவது வருத்தமாவது உண்டாக்கத்தக்கதாய் ஏதாயினும் ஒன்றுசொல்ல நமக்குக் கோபமுண்டாகின்றது; அதை விலக்க ஒரே ஒருவழிதான் உண்டு. அதாவது, எதிரியின் நிலையில் நாம் நிற்பதாக நினைத்து, நம்மைக்குறித்துப் பிறர் அந்தக் கொடியசொற்களைச்சொன்னால் எவ்விதமாய் இருக்கும் என்பதை நாம் சீர்தூக்கிப் பார்ப்பதேயாம்.

பரோபகாரஞ்செய்யப் பின்வாங்காதிருப்பதும் தர்மகுணமே. பிறரிடத்தில் நமக்கு அபிமானமுண்டாகுமாயின், நாம் அவர்களுக்கு உதவிசெய்ய அபேக்ஷிக்கிறோம்; முக்கியமாய் அவர்கள் வருந்தக் காணும்போது நாம் வேண்டுவதைக் கொடுத்து உதவவிரும்புகிறோம். இப்ப

டிக் கொடுக்கவேண்டுமென்கிற விருப்பம் உண்மையாய் அவர்களுடைய க்ஷேமத்தையே கருதி உண்டாயிருக்குமாயின், அப்போது அது நல்ல உதவிதான்; அதனல் அநேகமாக நன்மையே விளையும். ஏனெனில் அப்போது அவர்களுக்கு அவசியமாய் வேண்டுவன இவையென்பதையும், அதைப் பூர்த்தி செய்யவேண்டிய உசிதமான மார்க்கம் இன்னதென்பதையும் செவ்வையாய்த் தெரிந்துகொண்டு அதற்குத் தக்கபடி நடப்போமல்லவா? இவ்விதமன்றி மற்ருெருவிதமான ஈகை உண்டு. அது சரியான தர்மபுத்தியால் உண்டாவதல்ல; ஆதலின் அது பிறருக்கு நியாயமான உதவியாக முடிவதில்லை: யாசகர்கள் நன்ருய் உழைக்கத்தக்கவர்களாய் இருக்கிருர்களென்றும், தாம் கொடுக்கிற பிச்சை அவர்களை உழைக்கவொட்டாமல் சோம்பேறிகளாகவே செய்துவிடுமாகையால் அவர்கட்குத் தாம் இடுகிறபிச்சை தீமையேயன்றி நன்மை விளைவிப்பதில்லையென்றும் நன்ருய்த் தெரிந்திருந்தும், சிலர் பிச்சைக்காரருடைய தொல்லை பொறுக்கமாட்டாமல் எப்படியாவது அவர்கள் ஒழிந்தாற்போதும் என்று அதற்காகவே இரப்போர்க்குப் பிச்சைபோடுகின்றனர்; சிலர் பிறர்கொடுப்பதைப்பார்த்துத் தாமும் கொடுக்கின்றனர்; சிலர் புகழ்ச்சி பெறவேண்டும் என்று கொடுக்கின்றனர். அதுவேயொழியத் தம்முடைய ஈகை நன்மைபயக்கின்றதோ அல்லவோ என்பதைச் சற்றும் கவனிப்பதில்லை. உண்மையான தர்மகுணமானது பிறருக்காகத் தான் வருந்தி, அவர் தமக்குத்தாமே துணையாவதற்கு வேண்டிய வழிகளைத் தேடிக்கொடுக்கும்படியானது. சில சமயங்களில் இரப்போர் ஈவோர் இவருள் ஒருவருக்கும் நன்மைபயக்காதபடி அத்தனை அகங்காரத்தோடும் தானங் கொடுக்கப்படுவதுண்டு.

இதற்குத் திருஷ்டாந்தமாய் ஒரு போர்வீரனைப்பற்றிய பழங்கதை ஒன்றுண்டு. ஆகாயம் மாசற்று ரம்மியமாயிருந்த ஒருநாள் சூரியோதயகாலத்தில் அவன் குதிரைமேல் ஏறிக்கொண்டு அரண்மனையை விட்டு வெளியே போகப் புறப்பட்டான். புறப்பட்டுக் குதிரை கோட்டைவாயிலைத் தாண்டி வரும்போது அங்கே ஒரு குஷ்டரோகி தள்ளாதவனாய்ப் பசித்து வருந்தி இரக்கக்கண்டு, ஒரு பொன்நாணயத்தை அவன் எதிரில் எறிந்துவிட்டு, அவ்வெளிய மனிதனைப்பற்றி மற்றொன்றும் சிந்திக்காமலே அவன் அப்புறம்போய்விட்டான். அந்த நோயாளி அவன் அப்படிப்போவதைப் பார்த்திருந்தானேயொழிய, அவன் தரையில் எறிந்த நாணயத்தைக்கண்டு எடுக்கவில்லை. அப்படியிருக்கச் சிறிதுநேரங்கழித்து யாரோ ஒருஎளிய வழிப்போக்கன் அவ்வழியாக வர, அவன் இந்த நோயாளி கோட்டைவாயிலுக்கருகில் ஒதுங்கிப் பசியால் வருந்திக் கிடக்கக்கண்டு, ஐயோ பாவம் என்று அவனிடத்தில் மனம் இரங்கி, அவனண்டை போய் அவனை எழுந்திருக்கச் செய்து, மெல்லக் கைபிடித்துச் சமீபத்தில் இருந்த ஒரு குளக்கரைக்கு அழைத்துக்கொண்டுபோனான். அக்குளக்கரை போய்ச் சேர்ந்து, அங்கு அந்தத் தள்ளாத கிழவனுடன் உட்கார்ந்துகொண்டு, தான் கொண்டுபோன மூட்டையை அவிழ்த்து அதில் இருந்த அடையை எடுத்துச் சரிபாதியாகப் பகிர்ந்து, அவனுக்கு ஒரு பாதி கொடுத்து மற்றதைத்தான் புசித்தான். பிறகு அந்தத் தடாகத்தினின்றும், தண்ணீர் கொண்டுவந்து அதை அவனுக்கும் கொடுத்துத் தானும் குடித்துவிட்டு, அவனிடம் விடைபெற்றுக்கொண்டு தன்வழியே போயினான். முன் பொன் நாணயத்தை எறிந்த போர்வீரன் தானம்கொடுத்தவனே ஆயினும் "தர்மமே தலைகாக்கும்" என்றபடி தர்மகுணத்

தைக் காட்டினவன் இந்த எளிய வழிப்போக்கனேயாம். ஆதலின் பிறருக்கு உபகாரமாவது நாம் கொடுக்கும் பிச்சையன்று; அவர்களுடைய நிலையைப்பார்த்துப் பரிதாபப்பட்டு அதற்கேற்றபடி நடப்பதே உபகாரம்.

பிறருக்கு நேரும் துன்பங்கள் யாவையும் தாங்கத்தக்க பொறுமையும் திறமையும்கூடத் தர்மகுணத்தில் சேர்ந்தனவேயாம்.

"தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்"

என்கிறபடி, தர்மகுணமுள்ளவன் பிறர்க்குற்ற துன்பத்தைத் தீர்க்கும்பொருட்டுத் தான் கஷ்டங்கவலைகளையெல்லாம் அனுபவித்திருப்பான். மேலும் அவன் பிறர்செய்யும் பிழைபாடுகளைப் பார்த்துப் பொறுத்திருந்து, அவர்களை அலக்ஷியம்செய்வதைவிட்டு, அவர் அந்தப் பிழைகளைப் போக்கிக்கொள்ளவேண்டிய வழிகளைத் தேடிக்கொடுப்பான்.

இதனால், பிராணிகளிடத்தில் மிக அன்பும் ஆதரவுமாய் அவைகளுக்கு நன்மைவிளைவிக்கின்ற நற்குணமே தர்மகுணமெனத் தெளிவாகின்றது. தர்மகுணமுள்ளவன் எப்போதும் அயலார்க்கு நன்மையையே கோருவான். அந்த நற்குணம் ஒருவரிடத்தில் அமைந்திருக்குமாயின், அன்பு, ஈவு, இரக்கம்முதலிய நற்செய்கைகளால் அது தானே வெளியாகும்.

—:o:—

## 4. நீர்.



கடவுளால் படைக்கப்பட்ட இவ்வுலகில் அதிகமாய்ப் பரந்துள்ள பல பொருள்களுள் தண்ணீரும் ஒன்று,

ஏறக்குறையப் பூகோளத்தின் முக்கால்பங்கு தண்ணீரால் மூடப்பட்டிருக்கின்றது. இவ்வியனுலகமெங்கும் விரிநீர் பரவியிருப்பதே ஜீவவர்க்கங்களிடத்தில் சர்வேசுவரன் பரிபூரண காருண்யமுள்ளவனென்பதற்கு ஒரு அத்தாட்சியாம். பிராணி வர்க்கங்களுக்கும் விருக்ஷவர்க்கங்களுக்கும் நீரானது இன்றியமையாத பொருள். இதுவே சிற்பம் கைத்தொழில் முதலான சிறந்தவேலைகளுக்கு முக்கியமான துணைக்கருவியாகின்றது; அன்றியும், ஜலமே ஆறுகளாகவும், ஏரிகளாகவும், கடல்களாகவும் இருந்து கொண்டு, பூமியிலுள்ள நானுதேசத்தாரும் ஒருவர்க்கொருவர் பழகிப் போக்குவரவுசெய்வதற்கும் சாதனமாயிருக்கின்றது; அழிவற்ற நீர்நிலையான சமுத்திரத்தினின்றுதான் மேகங்கள் நீராவியாயெழும்பி, வறண்டு தீந்து போன பூமி குளிரும்படி மழைபொழிந்து செழுமை உண்டாக்குகின்றன. இதற்கெல்லாம் நாம் எவ்வளவு நன்றியுள்ளவர்களாயிருக்கவேண்டும்.

> "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
> துண்ணின் றுடற்றும் பசி."

பூமியிலுள்ள ஆமஜன், மிஸ்ஸிஸிப்பி என்னும் மகாநதிகளைப் பார்க்க ஆயிரமடங்கு பெரிதான ஆறுகள் ஆகாயத்தில் பலவுள. அவை வசந்தத் தூற்றல்களாகவும், கோடை மழைகளாகவும், மாரிக்காலத்துப் பெருமழைகளாகவும், சீதகாலத்துப் பனிகளாகவும் பூலோகத்தில் தோன்றுகின்றன. இப்பூமண்டலமெங்கும் மேடுபள்ளமின்றிச் சமநிலமாயிருக்குமாயின், இவ்விதமாய் வருஷந்தோறும் ஆகாயத்தினின்று பொழியும் மழைநீர் ஐந்தடி ஆழமான தடாகம்போல் பூதலமெங்கும் கவர்ந்துகொள்ளும்.

இப்போது பெரிய ஆறுகள் ஏரிகள் முதலிய சகல ஜலாசயங்களிலும் காணப்படுகிற ஜலமெல்லாம் ஒருகால் மேகங்களாயிருந்தவைதாம். அந்த மேகங்கள் யாவும் சூரியன் தனது திவ்யசக்தியால் கடல்களினின்றும் ஆகாயத்தில் இழுத்துவிட்ட ஆவிகளேயன்றி வேறல்ல. அந்த ஆவிகள் கடலினின்றும் வெளியே கிளம்பினவுடன், காற்றானது அவைகளை வெகு வேகமாய் அடித்துக்கொண்டு போய், நீரில்லாமல் வறண்ட வயல் மலை மேடு முதலிய பல இடங்களில் சேர்த்து மேகங்களாக்குகின்றது. இப்படி உருக்கொண்ட மேகங்கள் பூமியெங்கும் பசுமையாய்ச் செழித்துச் சிங்காரமாயிருக்கும்படி வயல்களிலும், மேய்ச்சற்றரைகளிலும், கனிமரங்கள் நிறைந்த தோட்டங்களிலும் தோப்புகளிலும், வெயிலால்வறண்டு தூசுபறக்கும் பாதைகளிலும் சாலைகளிலும், வழியோரங்களிலுள்ள புற்றரைகளிலும் பரிபூரணமாக மழைபொழியும்.

"விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது."

பளபளப்பான பனித்துளிகளாய் வந்து வீழ்வதும் சமுத்திரமே; கோடைமழைகளாய் வருஷித்துப் பூமியைக் குளிரச்செய்வதும் சமுத்திரமே; புல்லை வளர்த்துச் செம்மை வெண்மை நீலம் என நானாவர்ணமான கொடிச் சீலைகளை விரிப்பதுபோல் அழகான மலர்களை மலர்த்துவதும் சமுத்திரமே; விருக்ஷங்களைப் பழங்களாலும், புலங்களைச் செந்நெற்பயிர்களாலும் அலங்கரிப்பதும் சமுத்திரமே; நூல் நூற்றுத் துணிநெய்வதற்குரிய கருவிகளை ஓட்டுவதும் சமுத்திரமே; மிகப்பெரிய மகாயந்திரங்களில் பரிமாபோல் பூட்டப்பட்டு அநேகமாயிரம் மனிதர்களாலும் குதிரைகளாலும் செய்யமாளாத வேலைகளை நடத்து

வதும் சமுத்திரமே, மரங்களை அறுப்பதும், பூமியின் அடிப்புறங்களிலுள்ள நிலக்கரிகளைப் பெயர்ப்பதும், நீராவி யந்திரங்களில் ஆவியாய்க் கிளம்புவதும் சமுத்திரமே. சமுத்திரமானது நமக்கு ஆடையுடுத்துக் குளிர்ச்சியுண் டாக்கி நம்மை வேண்டுமிடத்திற்கு ஏற்றிக்கொண்டுபோ வதும் அல்லாமல், நமக்காகத்தானே பற்பல பணிவிடை களும் செய்கின்றது. நதிகளிலும் தடாகங்களிலும் கயங் களிலும் உள்ள நீர், பனித்துளி உறைபனி மூடுபனி கல் மழை பெருமழை ஆகிய இவை யாவும் சமுத்திரத்தி னின்றே பிறந்து வந்தவையாம்.

கடல்களிலாயினும், குளங்களிலாயினும், ஆறுகளிலா யினும், ஊற்றுக்கண்களிலாயினும் எங்கும் நீர் ஒருதன் மைத்தே. மழைநீர் ஆற்றுநீர் இவைகளைவிடக் கடல்நீர் வேறுவிதமான சுவையுள்ளது என்றுலோ, அந்த வேறு பாடு நீரைப்பற்றியதல்ல; அதனுடன் கலந்துள்ளபொ ருள்களைப்பற்றியதேயாம்.

ஜலத்தில் பிராணவாயு ஜலவாயு என்கிற இரண்டு வாயுக்கள் கலந்திருக்கின்றன. அது ஒரு பங்கு ஜலவாயு வுக்கு எட்டுப்பங்கு பிராணவாயு வீதம் கலந்திருக்கின் றது. இதில் ஒரு அதிசயம் பாருங்கள்! ஜலவாயு எளிதில் அக்கினியை வளர்ப்பதற்கும், சுவாஸவாயு அதைத் தாங் குவதற்கும் முதற்கருவியாயிருக்க, இவ்விரண்டும் கலந் தால் அவ்வக்கினியை அவிக்கும் தன்மையுடைய பொரு ளாகின்றது.

சுத்தமான ஜலத்திற்கு நிறமுமில்லை, உருசியுமில்லை, மணமுமில்லை; ஆயினும் அவ்விதமான நிலையில் அதைக் காண்பது அரிது. அது எப்போதும் வாயுமண்டலத்தி லாவது பூதலத்திலாவது உள்ள பற்பலவிதமான பொருள்

களோடு கலந்தேயிருக்கும். வடிகட்டினாலன்றி மற்றெந்த நீரும் மேகத்தினின்று விழும் மழைநீரைப்போல அத்தனை சுத்தமாயிராது.

பூமியிலுள்ள நீர் நன்னீரென்றும் உவர்நீரென்றும் இருவகை. இம்மாநிலத்தின்மீது ஆறுகள் அருவிகள் கயங்கள் கிணறுகள் தடாகங்கள் இவற்றிலுள்ள நீரெல்லாம் நன்னீராம். தண்ணீரின் உபயோகத்தைக் கெடுக்கிற உவர்ப்புப்பொருள் அவைகளில் கலந்திராமையால் அவை நன்னீரெனப்படுகின்றன. வட அமெரிக்காவிலுள்ள தடாகங்களென்னப்பட்ட பெரிய ஜலாசயங்களில் பூமியிலுள்ள நன்னீரில் பாதிக்குமேலேயே அடங்கியிருக்கின்றதென்கிறார்கள்.

சமுத்திரங்களில் உள்ளநீரெல்லாம் உப்புநீர். பல ஊற்றுக்களும் ஜலாசயங்களுங்கூட உப்பாயிருப்பதுண்டு. இப்பூலோகத்திலுள்ள திரவப்பொருள்களில் உப்புநீரே மிகவும் அதிகம். கடல்நீரில் நூற்றுக்கு மூன்றரைப்பங்கு உவர்ப்புக்கலந்திருக்கின்றது. குறைந்தபக்ஷம் கடல் எங்கும் ஆயிரமடி ஆழமுள்ளதென்று வைத்துக்கொண்டால், அதிலுள்ள உப்பு, இமயமலையின் பரிமாணத்தில் சற்றேறக்குறைய மூன்றில் இரண்டுபங்கும், ஐரோப்பாவிலுள்ள ஆல்ப்ஸ் பருவதத்தைப்போல் ஐந்துபங்கும் இருக்குமென்று கணக்கிடுகிறார்கள்.

பூமத்தியத்திற்கு அருகிலும் துருவத்திற்குச் சுற்றிலும் உள்ள கடல்களில் மற்றவிடங்களைப்பார்க்க உவர்ப்பு வெகுகொஞ்சம். ஏனெனில், பூமத்தியில் அதிக மழை பெய்வதனாலும், துருவத்திற்கடுத்த தேசங்களில் உறைந்த பனிக்கட்டிகள் உருகி நீராவதனாலும் அங்குள்ள உவர்ப்பு அதிகமாய்த் தலைபெடுப்பதில்லை.

கடல்நீர் உவர்ப்புவஸ்துக்கள் கலந்திருப்பதனுல் மற்ற நீர்களைவிடக் கனத்திருக்கின்றது. அதனுல் அது கப்பல்கள் மிதந்து போக்குவரவுசெய்ய மிகவும் அனுகூலப்படுகிறது. கீற்றுக்களால் கணக்கிட்டுக்காட்டிய சீதோஷ்ணமானியென்னும் கருவியில் பாதரஸம் 32-வது கீற்றுவரை இறங்கினுல் நன்னீர் உறைந்துபோகும்; உவர்நீரோ 28½ பாகம்வரையில் இறங்கினுலன்றி உறைவதில்லை. கடல்நீர் எப்போதும் ஓயாமல் அசைந்துகொண்டிருப்பதால் எவர்க்கும் ஆரோக்கியமா யிருக்கின்றது. இல்லாவிடின் நீர் ஓரிடத்திலேயே நிலைத்துத் தேங்கி நாற்றமெடுத்துப்போகும்.



## 5. சக்கரவர்த்தியும் சிறுகுழந்தையும்.

வெகுகாலத்திற்குமுன்னே வட இந்துஸ்தானத்தில் சூரியன் அழகாய்ப் பிரகாசித்துக்கொண்டிருந்த ஒரு நாள் மிக்க கம்பீரமான வடிவமும் கறுத்தமேனியுமுள்ள ஒருவன், உடம்புமுழுதும் வெள்ளைப்போர்வை போர்த்துக்கொண்டு, கங்கைக்கரையோரமாக நிதானமாய் நடந்து வந்து அங்கோரிடத்தில் நின்று நிர்மலமாய்த் தெளிந்தோடுகின்ற நீரோட்டத்தை அதிக நுட்பமாய் உற்றுப்பார்த்துக்கொண்டிருந்தான். அச்சமயத்தில் அவன் முகக்குறியைப் பார்க்கும்போது நன்றாய்த் தீர்க்காலோசனை செய்ய வேண்டிய முக்கியமான விஷயமொன்று அவன் மனதில் தோன்றியிருப்பதாகத் தெரியவந்தது. அகத்தினழகுமுகத்தில் தெரியுமல்லவா? சிறிதும் சலியாமலும் வாயைத் திறந்து ஒன்றும் பேசாமலும் அவன் அப்படியே அசை

மணிநேரம் பார்த்துக்கொண்டு நின்றான். பார்க்கப் பார்க்க அவன் முகம் குரூரமாயும் கறுப்பாயும் மாறிக்கொண்டே வந்தது.

அப்போது யாரோ இரண்டுமூன்றுபேர் தண்ணீர் எடுத்துக்கொண்டு அவ்வழியே போக, அவர்களுள் ஒருவன் அம்மனிதனைக் கண்ணுற்று அவன் நிற்பதை மற்றவர்களுக்குக்காட்டி நகைத்து, "இதோ பாருங்கள்; இங்கே ஒரு க்ஷத்திரியன் தன் சாப்பாட்டுக்காக எப்போது சிறந்த மீன் ஒன்று வரப்போகின்றதெனப் பார்த்துக்கொண்டிருக்கிறான்" என்றான்.

அதைக் கேட்டுச் சிரித்துக்கொண்டே அவனைப்பற்றி மற்றொன்றும் நினையாமல் அவர்கள் அப்புறம் போய்விட்டார்கள். அத்தருணத்தில் அவன் ஆலோசித்துக்கொண்டிருந்தது இன்னதென்று தெரிந்திருக்குமாயின், அவர்கள் அவ்வளவு பரிகாசமாய்ச் சிரித்திருக்கமாட்டார்கள். அப்போது அத்தேசமுழுதும் அரசாட்சிசெய்துகொண்டிருந்த **பேபர்** சக்கரவர்த்தியைக் கொல்லுகிறவிதம் எப்படியென்பதைப்பற்றி அவன் அச்சமயத்தில் ஆலோசனை செய்துகொண்டிருந்தான்.

பேபர் சக்கரவர்த்தி அவனுக்குச் செய்த தீங்கு என்னவென்கிறீர்களோ?

கேளுங்கள்: முதலில் அந்த பேபர் சுதேசத்தரசனன்று; இமயமலைக்கு வெகுதூரம் அப்பாலிருக்கின்ற ஒரு தேசத்தினின்றும் திரண்டசேனையோடுவந்து இத்தேசத்தை ஜயித்தவன். அப்படி ஜயித்ததுமாத்திரமேயன்றி இத்தேசமெல்லாம் நன்றாய்ச் சீர்பட்டிருக்கும்படி மிகக் கண்டிதமான சட்டங்கள் ஏற்படுத்தி, அந்தச் சட்டங்களை மீறி நடப்பவர்களைக் கொடுமையாகத் தண்டித்துக்கொண்டு

மிருந்தான். ஆனதுபற்றி, அவன் வாஸ்தவத்தில் மிக்க நல்லவனும் குடிகளிடத்தில் காருணியமுள்ளவனுமிருந்தும், அநேகர் அவனை மிகவும் பகைத்துக் கொடியனென்றும், அநியாயக்காரனென்றும் எண்ணினார்கள். இப்படி அந்தச் சக்கரவர்த்தி குடிகளுக்குக் கொடுமை செய்துகொண்டிருக்கிறானென்று தோன்றினதுபற்றி, அவன் எவ்விதமாயாவது மாண்டுபோக வேண்டுமென்றும், அவனைக் கொல்லவேண்டியவன் தானேயென்றும் அந்த க்ஷத்திரியன் தீர்மானித்தான். அப்படிச்செய்வதனால்தன்னையும் உயிர்க்குயிர் மாய்த்துவிடுவார்களென்று அவனுக்கு நன்றாய்த் தெரிந்தும், அதற்காக அவன் சிறிதும் அஞ்சவில்லை. தான் அப்படிச் செய்யத் துணிந்தது மிகவும் பிசகென்று அவனுக்கு உடனே தெரியவந்ததென்றாலும், அப்போது தான் நியாயத்தை நிறைவேற்றப்போகிறவனாகவே நினைத்திருந்தான்.

அந்தச் சக்கரவர்த்தியைக் கண்டுபிடிப்பது அசாத்தியமான காரியமன்று. அக்காலத்து மற்ற ராஜாக்களைப் போல அவன் எங்கும் வெளிப்படாமல் அரண்மனையிலேயே உட்கார்ந்து பொழுதுபோக்கிக்கொண்டிருப்பவனல்லன்; ஒரு வேலைக்காரனைப்போல் அற்பமான உடையொன்று தரித்து, எல்லாம் தன் கட்டளைப்படி நடந்தேறுகின்றதா? குடிகளெல்லாம் சவுக்கியமாயிருக்கிறார்களா துன்பப்படுகிறார்களாவென்று நேராய்ப் பார்க்கும்படி பட்டணம் முழுதும் சுற்றுவதிலேயே விருப்பங்கொண்டிருந்தான். அது தெரிந்து அந்த க்ஷத்திரியன் ஒரு சிறு கத்தியைத் தன் உடைக்குள் ஒளித்துக்கொண்டு பட்டணத்துக்குச் சென்றான்.

அங்கே போனபோது, அவன் அதற்குமுன் ஒருநாளும் பார்த்திராத பேரிரைச்சலும் ஆரவாரமும் உண்டா

யிருந்தன. அவ்வாரவாரத்தின் நடுவே ஆண் பெண் குழந்தை அடங்கலும் மிக்க பயந்தவர்களாய்ப் பேரிரைச்சலிட்டு நாலாமூலேயும் ஓடிக்கொண்டிருந்தார்கள். அப்போது அடிக்கடி, ஒரு வீடு இடிந்துவிழுந்ததுபோலவும், ஒரு பெரிய மரம் வேரோடு பெயர்ந்ததுபோலவும் தொனியொன்று கேட்டுக் கொண்டிருந்தது. அப்படியிருக்கப் பெரிய யானையொன்று ஒரு கடைத்தெருவினின்றும் விடுபட்டு, மிக்க மதவெறியினால் பயங்கரமாய்ப் பிளறிக்கொண்டும், தனக்கு எதிர்ப்படுவதையெல்லாம் அழித்துக்கொண்டும் பட்டணமெல்லாம் சுற்றித் திரிந்து அந்தத் தெருவின் மத்தியில் ஓடிவந்தது.

அப்போது அந்தக் காட்சி பார்க்க வெகு பயங்கரமாயிருந்தது. கன்னங்கறேலென்று பருவதம்போன்ற ஒரு மிருகம் பெரிய புகைவண்டிபோல் எதிரில் ஒன்றையும் நிற்கவொட்டாமல் அடித்துத் தள்ளிக்கொண்டும், துதிக்கையை வீசி இருபுறத்திலுமுள்ள குடிசைகளையெல்லாம் பெயர்த்துக்கொண்டும், கத்தியுறைபோல் இரண்டு தந்தங்களும் வெளேலென்று பருத்துநீண்டு பிரகாசிக்க, வாய் நுரை தள்ள, ஓடி வந்ததென்றால் அதைவிடப் பயங்கரமான காட்சி வேறென்ன! எங்கேபார்த்தாலும் ஜனங்கள் பயந்து அவயக்குரலிட்டுக்கொண்டு தாறுமாறாய் இருபுறமும் ஓடினார்கள்.

இனி வரப்போகிற கதையைச்சார்ந்த தேசாசாரம் ஒன்று உண்டு: அதாவது, நமது தேசத்திலுள்ள ஈனஜாதியான பறையர்களை யாவரும் தாழ்மையாக நினைத்து இகழ்கிறார்களென்பதும், கொடிய தொத்துநோய் உள்ளவர்களைப்போல அவர்களை ஒதுக்கிவைத்திருக்கிறார்களென்பதும் நமக்குப் பிரத்தியக்ஷமாய்த் தெரிந்தவிஷயமேயல்லவா? இப்படி அவர்களைத் தனிமையாக்கி வைத்திருப்ப

தற்குரிய நியாயங்களை யெடுத் துரைக்கப்புகின் மிகப் பெருகும். ஆயினும் கொலை களவு செய்தவர்களுடைய கூட்டுறவைப்போலவே சண்டாளர்களுடன் சேருதல் தோஷமென்பது ஹிந்துக்களுடைய கோட்பாடு.

இப்படியிருக்கையில், எளிய பறைப்பிள்ளை ஒன்று பசியால் வருந்தி நடக்கமாட்டாமல் ஓடுகையில் கால்தடுக்கி யானை ஓடிவருகிறவழியில் விழுந்துவிட்டது; ஒரு நிமிஷ காலம் அப்பிள்ளை அவ்வண்ணமே வீழ்ந்திருக்குமாயின் யானை மிதித்துத் துவையலாய்ப்போயிருக்கும்! அது கண்டு வேலைக்காரன்போல் உடைதரித்திருந்த ஒருவன் உடனே சரேலென்று யானைக்கு எதிரே தாவிக்குதித்து அதன் காலுக்குத் தப்பும்படி அந்தச் சிறுவனை வாரியெடுத்துக் கொண்டு பின்பக்கமாய்ப் பாய்ந்து ஓடிப்போனான். அந்த யானை அவ்வழியே வெறிகொண்டு ஆற்றிற்காக ஓடிப்போயிற்று. அந்த மனிதன் குழந்தையை எடுத்துக்கொண்டு பிணனுக்குத் திரும்பினவேகத்தில், அதுவளையில் அவன் முகத்தை மறைத்துக்கொண்டிருந்த பாகை தவறிக் கீழே விழ்ந்தது; அப்போது யாவரும் அவன் முகத்தைப் பார்த்து, இப்படி ஒரு பறைப்பையனைக் காப்பதற்காகத் தன் உயிருக்குத் துணிந்தவன் பேபர் சக்கரவர்த்தியே என்று அறிந்தார்கள்.

அதுவளையிலிருந்த பேரிரைச்சலெல்லாம் திடீரென்று அடங்கிப்போக, யாவரும் தங்கள் கண்களை நம்பமாட்டாதவர்போல் ஒருவரையொருவர் விழித்துப் பார்த்துக் கொண்டு ஸ்தப்தமாய் நின்றனர். இப்படி எல்லோரும் பிரமித்துப் பேசாதிருக்கையில் ஒருவன் எதிரே ஓடிவந்தான். அவன் முன்சொன்ன க்ஷத்திரியனும். வந்ததும் அந்த க்ஷத்திரியன் சக்கரவர்த்தியின் தாள்களில் வீழ்ந்து

தன் கையிலிருந்த கத்தியைக் காட்டிக்கொண்டு உறுதியாய் ஒருவார்த்தை சொல்லலானுன்:

"மகாப்பிரபுவே, நான்உங்களுக்குப் பகைவன்; இன்று நான் உங்களைக் கொல்லக் காத்திருந்தேன்; உயிரை அழிக்கின்றவனைவிட உயிரைக் காக்கின்றவன் எவ்வளவு சிறந்தவன்! கடவுளால் காக்கப்பட்டிருப்பவனைக் கொல்ல என் கை வலியதன்று. இதோ இந்தக் கத்தியை எடுத்து உங்களைக் கொல்லக்கருதினவனைக் கொன்றுவிடுங்கள்" என்று முறையிட்டான்.

இப்படி அவன் தன் குற்றத்தை உறுதியாய் உரைத்ததைக் கேட்டுச் சக்கரவர்த்தியின் சோதி முகத்தில் ஒருவகைப் புதுமையான புன்னகையுண்டாயிற்று. உடனே சக்கரவர்த்தி கையைநீட்டிக் கீழேவிழுந்திருந்த மனிதனை மெல்லத் தூக்கி யெடுத்து நன்மொழியாய் அவனுடன் சொன்னதாவது:—

"என் நண்பனே, அப்படிச்செய்யலாகாது; உயிரைக் கொல்வதைவிடக் காப்பது நலமென்று நீயே இப்போது தெளிந்து உரைத்தாயல்லவா? தன் குற்றத்தை அங்கீகரித்து அதற்காக அநுதாபப்படுகிறவனைக் கொல்வது நியாயமா? உன்கத்தியை நீயே வைத்துக்கொண்டு என்னுடைய ராஜகாரியத்தில் உபயோகப்படுத்து. இன்று முதல் உன்னை என் அரண்மனைக் காவலாளனுக ஏற்படுத்துகிறேன்" என்ருன். அதைக்கேட்டு அந்த முரட்டுவீரன் தலைவணங்கிக் குழந்தைபோலக் கண்ணீருகுத்து நின்ருன்.

பின்பு பேபர் சொன்னது சரியாகவே நடந்தது. பிற்காலத்தில் அந்த க்ஷத்திரியன் அவனுக்குச் சிறந்த போர்வீரனுகிப் பலதட்வை அவனை யுத்தத்திலே காப்பாற்றி

னன். சக்கரவர்த்தி தன்னைக் காப்பாற்றினதையும், "உயி ரைக் கொல்வதைவிடக்காப்பது நலம்" என்று அவன் சொன்ன வாக்கியத்தையும் தன் ஆயுளளவும் வாய் ஓயா மல் சொல்லிக்கொண்டே அவன் காலங்கழித்தான்.

## 6. ஆண்மை.

தாம் ஆண்மை உள்ளவர்களாயிருக்கவும் அல்லது ஆண்மையுள்ளவரெனப் பிறரால் மதிக்கப்படவுமே சிறு வர் விசேஷமாக விரும்புகின்றனர். அதைப்பார்க்கிலும் அதிகமான அவா அவர்கட்கு மற்றொன்றிலுமில்லை. அப் படி அவர்கள் ஆண்மைக்குணமுள்ளவர்களாயிருக்க வி ரும்புவது மிகவும் நல்லதுதான். ஆயினும், ஒரு கோபு ரத்தைப்பற்றி உபந்நியாஸமெழுதப் புகுந்த விளையாட்டுப் புத்தியுள்ள வாலிபன் "பிள்ளையார் பிடிக்கப்போய்க் குரங்காய் முடிந்தது" என்பது போலக் கோபுரம் என் னும் பேர்பெற்ற ஓர் பந்தயக்குதிரையின் பிறப்புவரலாறு, உருவமைப்பு, அது பந்தயங்களில் பெற்றஜயம் முதலிய வைகளை வர்ணித்தெழுதியதுபோல் இவர்களும் ஒன்று கிடக்க ஒன்றாக நினைத்து நடக்கின்றனர். தான் எழுதப் புகுந்த விஷயம் இன்னதென்பதையே அவன் நன்றாய் அறிந்துகொள்ளவில்லை. பல பிள்ளைகள் தாங்கள் ஆண் மையுள்ளவர்களாயிருக்கவாய்த்த காலத்திலும் அப்படி யிருப்பதில்லை. அவர்கட்கு ஆண்மைக்குணம் இப்படிப் பட்டதென்பதும் தெரியாது; அதைப்பெறத் தாம் பாடு படவேண்டியவழி இன்னதென்பதும் தெரியாது.

அத்தன்மையான பிள்ளைகளுள் ஒருவன் ஆண்மைக் குண முடையவனாயிருக்கவேண்டுமென்று மிக்க அவாக்

கொண்டு, "நான் அதற்காக ஆண்மக்களைப்போலிருக்க வேண்டும்: ஆண்மக்கள் ஒழுங்காய் மீசைவைத்துக்கொண்டு, பொன்சங்கிலி, மூக்குக்கண்ணாடி, சரிகைத்தலைப் பாகை, விதம் விதமான உடை இவைகளைத் தரிக்கின்றனர்; வெகு அழகான பிரம்புகளைக் கையில் பிடித்து அலங்காரமாய்ச் சுழற்றிக்கொண்டு போகின்றனர்; மோதிரங்கள் இட்டுக்கொள்ளுகின்றனர்; புகைச்சுருட்டுப் பிடிக்கின்றனர்; அடங்காமல் சுதந்தரமாய்ப் பேசுகின்றனர். ஆண்மைக்குணமுள்ளவனாயிருக்கவேண்டு மென்றால் நானும் இவ்வண்ணமே நடக்கவேண்டும்" என்று நினைக்கிறான். இவ்வாறு நினைப்பது மிகப் பிசகானது; இவன்பார்த்து மேல்வரிச்சட்டமாகக் கொள்ளத்தக்க நடக்கையும் வெளித்தோற்றமுமுள்ள மனிதர் விசேஷமாய்க் கிடைப்பதரிது. மேற்சொன்னமாதிரி நடக்கையுள்ளவர்களெல்லாம் யோக்கியரான மனிதர்களல்ல. மேலுக்கு அற்பமான உடை உடுத்துக்கொண்டிருப்பவனாயினும், உண்மையாகப் பெருந்தன்மையுள்ளவனாயிருக்கலாம். ஆகையால், பிள்ளைகளே, நீங்கள் ஆண்மையுள்ளவர்களாயிருப்பதற்குச் சுருட்டு மோதிரம் முதலியவை வேண்டுவதில்லை; இவற்றைவிடச் சிறந்ததான மற்றொன்று வேண்டும். ஆண்மை உள்ளவராகவாயினும் இல்லாதவராகவாயினும் ஆவது உங்களிடத்திலுள்ள பொருள்களாலுமன்று; வெளிக்குப் புலப்படுகிற உங்கள் நடையுடை பாவனைகளாலுமன்று; நீங்கள் நிற்கின்ற நெறியினாலும் செய்கின்ற செய்கையாலுமேயாம்.

மற்றொருவகையான பிள்ளை சொல்வதாவது: "நான் ஆண்மையுள்ளவனாயிருக்க விரும்புகிறேன். ஆண்மைக் குணத்தை வேண்டுகிறவன் தைரியசாலியாயிருக்கவேண்

டும்; தைரியமே முதன்மையானது. பகைவர்க்கு வசப் படாமலும் பின்வாங்காமலும் இருக்கின்ற போர்வீரனும், பயம் இப்படிப்பட்டதென்றே அறியாதிருப்பவனும், தன் சொந்தமான சுகலாபங்களைத் துறந்திருப்பவனும், தான் விரும்பியதைக் கைக்கொள்ளுமளவும் காரியத்தில் கண்ணு யிருப்பவனும், சமயம் வந்தபோது எவ்விதமான துன்பத் திற்கும் உயிர்க்கேயாயினும் துணிந்திருப்பவனும், இவர் களுக்கெல்லாம் மேலாய் ஒன்றுக்கும் இணங்காதிருப்பவ னும் ஆகிய இவர்களே ஆண்மையுள்ளவர்களாம்; இப் படிப்பட்டவையே ஆண்மைக்குணமாம்" என்று சொல் லுகிறான். இந்தப் பையனையே நான் கொண்டாடுகிறேன். ஆண்மைக்குணமென்பது இவனிடத்தில் சிறிதுண்டு. முன் சொன்னவனிடத்தில் அது அமைந்திருப்பது சந் தேகமே. இவனும் ஆண்மைக்குணத்தில் சிறிதுமாத் திரம் பெற்றிருப்பவனேயன்றி முற்றும் பெற்றவனன்று. தைரியமும் நஷ்டகஷ்டங்களைத் தாங்கும் பொறுமையு மாத்திரமே ஆண்மைக்குணமல்ல; அவை சிறந்தகுணங் களே ஆயினும், அந்தக் குணம் மிருகங்களுக்கும் உண்டு. மேலும் அவை நமது தேகத்தைப்பற்றிய குணங்களே யன்றி மனதைப்பற்றியவையல்ல. மனிதர்களைப்பார்க்கி லும் மிருகங்களிடத்தில் அவை மிகவும் விசேஷமாகக் காணப்படுகின்றன. அதனால் நாய் முதலிய மிருகங்கள் ஆண்மையுள்ளவை யாகுமோ? இரண்டாவது, ஒரு மனி தன் தைரியமுள்ளவனும், வருத்தங்களை மதியாதவனுமா யிருக்கலாம்; அதனோடு கொடியனும் துஷ்டனுமாயு மிருக்கலாம்.

இன்னமொரு தன்மையுள்ள பிள்ளையுண்டு: அவன் பற்பலவர்ணமான வஸ்திரங்களைத் தரித்து, மல்லயுத்தங் களை மேலாசப் பேசுகிறான். இதைப்பற்றி அவன் சொல்

வதாவது: பந்தயங்களிலும் பலவகை வீரச்செயல்களி லும் வெற்றிபெறுவது ஆண்மைக்குணமாம். இக்குண முள்ளவனை ஆண்பிள்ளையெனக் கூறுகிறார்களல்லவா? தைரியமாய் வாகனமேறிச் செலுத்துகின்றவனும், குறித வறாத வில்லாளியும், துணிவுள்ள மல்லவீரனும், கைச் சுறுக்கும் கண்கூர்மையும் உள்ளவனும் ஆகிய இவர்கள் ஆண்மையுள்ளவர்கள்—என்றிப்படித் துணிவாய்ப்பேசு கிறான்.

இரண்டாம்பிள்ளை சிலவிஷயங்களில் முதலாம்பிள்ளை யை ஒத்திருப்பதுபோலவே மூன்றாம்பிள்ளையும் பலவிஷ யங்களில் அவர்களை யொத்திருக்கின்றான். இவர்களிருவ ரும் தேகபலத்தையும், சுகதுக்கங்களைத்தாங்கும் திறத் தையும், கஷ்டநஷ்டங்களுக்குச் சலியாத விடாமுயற்சி யையும் மேலாகப் பேசுகின்றனர். ஆயினும், இவ்வளவே ஆண்மைக்குரிய குணங்களென நினைப்பார்களாயின், அ வர்கள் பிசகினவர்களே. சுறுசுறுப்பான விளையாட்டுக் கள் மிகச் சிறந்தவைதாம்; ஒருவேலையும் செய்யாமலும் அல்லது மிகக்கேடுகெட்டதான ஒன்றைச் செய்துகொண் டும், பள்ளிக்கூடத்தில் ஒருபோதும் விளையாடாமல், மந் தமாய்ச் சோம்பி உட்கார்ந்திருக்கின்ற சிறுவன் ஒன்றுக் கும் உதவான். ஆயினும், பந்தடித்தும் போர்செய்யப் பழகியும் விளையாடாதவர்கள் ஆண்மையுடையவர்களல்ல ரென்று சிறுவர்களும் பெரியோர்களும் சொல்வது மிகப் பிசகானது. அது சரியாயிருக்குமாயின், தேகபலம் இல் லாத எவனும் ஆண்மையுடையவனாயிருக்கலாகாதே. மி குந்த தைரியசாலியா யிருந்தவர்களும் சிலர் தேகபல மற்றவர்களாயிருந்தனர். அப்படித் தேகபலம் இன்றி மிக்க தைரியசாலியாயிருந்தவன் லார்டு நெல்ஸன் என் னும் பெரிய கப்பற் படைத்தலைவன்.

ஆண்மைக்குணத்தில் சேராதவை இவையென்பதை நாம் இப்போது அறிந்துகொண்டிருக்கிறோம்; அதிற் சேர்ந்தவை எவையென்றுலோ, சொல்லுகிறோம் கேளுங்கள்: தைரியத்தோடுகூடத் தன்னுடைய கோபதாபங்களை அடக்கிக்கொள்ளும் குணமும், செய்கடனிற் கருத்தும் வேண்டும் தான் பேர்பெறவேண்டுமென்பதற்காகவே ஒருவன் ஒரு நற்செய்கை செய்வனுயின், அச்செய்கையின் பெருமை அத்தனையும் தன்னயம்பாராட்டுகின்ற ஒரு துர்க்குணத்தால் அழிக்கப்படுகின்றது. அவ்வாறு தன்னைப்பற்றி நினையாமல் அது தன் கடமையென்றெண்ணிச் செய்பவனிடத்திலேதான் ஆண்மைக்குணம் சரியாய் அமைந்திருக்கின்றது. ஆண்மைக்குணம் நம்மிடத்தில் பரிபூரணமாய் அமைந்திருக்கவேண்டுமென விரும்புவோமாயின், தைரியமும் உண்மையும் உடையவர்களா யிருப்பதோடுகூட, அடக்கமும், வணக்கமும், மனத்தூய்மையும் உள்ளவராயிருக்கவேண்டும். கடைமொழியாக ஒன்று சொல்லுகிறோம்.—சாந்தகுணம், ஜீவகாருணியம், தைரியம், வலிமை, நீதி, விவேகம், உண்மை இக்குணங்களில்லாத எவனும் எப்பொழுதும் இதுவரையில் பெருமை பெற்று வாழ்ந்ததில்லை.

## 7. பூமி கற்பிக்கின்ற நீதிகள்.

பூமி கற்பித்துக்கொடுக்கிற முக்கியமான நீதிகள் என்னவென்று கேட்கிறீர்களோ? அவை பற்பலவிதமானவை; அவற்றை முற்றுமுணர ஒருவராலும் ஆகாது; ஆயினும் முதன்மையான சிலவிஷயங்களை அடியில் எடுத்துச்சொல்வோம்.—

**முதலாவது:** கடவுளின் அறிவும் வல்லமையும் இப்படிப்பட்டவையென்று பூமி நன்றாய்க் காட்டுகின்றது.

இந்த விஷயத்தை ஸ்தாபிப்பதற்கு அத்தாட்சியொன்றும் வேண்டுவதில்லை. நிரீசுவரவாதிதவிர மற்றெவனும் இந்த விஷயத்தை மறுக்கத் துணியமாட்டான். சகலமான பிராணிகளுக்கும் இருப்பிடமாய் அமைக்கப்பட்டிருக்கின்ற இந்தப் பூமண்டலத்தைப் பார்க்கும்போது இதற்கு ஆதிகாரணமொன்று இருக்கவேண்டுவது அவசியமெனத் தெளிவாகின்றது; இந்த சிருஷ்டியிலுள்ள ஒவ்வொரு பொருளையும் பார்க்கும்போது அவைகள் ஒப்புயர்வில்லாத ஓர் பேரறிவினாலும் பேராற்றலாலுமே அத்தனை அற்புதமாக அமைக்கப்பட்டிருக்கின்றனவென விளங்குகின்றது; அதிநுட்பமான பூண்டு பிராணிமுதலியவற்றுள்ளும் பூதக்கண்ணாடியின்மூலமாய்த் தோன்றுகின்ற பல புதுமைகள் தம்மைப் பிறப்பித்தவன் அப்பிராகிருதமான ஒரு உத்தமபுருஷனென எடுத்துரைக்கின்றன. இவற்றையெல்லாம் மறுத்துரைக்க எவராலாகும்? இவற்றை உண்டென்று சாதிப்பது எளிதானகாரியம்; இல்லையென மறுத்துரைப்பதோ மிகவும் கடினமானது.

**இரண்டாவது:** பழைய பொருள்கள் அழிந்து புதியவைகளை உற்பத்தியாக்குகின்றனவென்னும் உண்மையைப் பூமி நமக்குக் கற்பிக்கின்றது.

வருஷந்தோறும் இப்பூமியில் நடந்தேறுகின்ற காரியங்களை விசாரிப்பவனுக்கு ஒரு பொருள் அழிவது மற்றொரு பொருள் உற்பத்தியாவதற்கு ஏதுவாகின்றதென்பது ஒருபோதும் தெரியாமற்போகாது. பிரதிவருஷமும் பல்லாயிரம் இலைகளும் செடிகளும் மக்கி மண்ணாகிப் புதிய பயிர்களுக்கு ஊட்டம் கொடுக்கின்றன. ஒன்றின்

பின் ஒன்றாய்ப் பல இலைகள் உதிர்ந்து அழுகி, நிலம் செழித்து மறுவருஷம் நல் விளைவு விளைவிப்பதற்கு உதவியாகின்றன. பல்லாயிரம் செடிகள் அழிந்து மண்ணாகி மறுபருவத்தில் பயிர் செழித்து வளர்வதற்கு எருவாகின்றன. பூமியில் விதைக்கும் விதைகளும் இந்த உண்மையை நமக்கு நிதர்சனமாகக் காட்டுகின்றன. விதைத்த விதைகளெல்லாம் முதலில் அழிந்தே தாள்களாகவும் கதிர்களாகவும் கதிர்களில் தானியங்களாகவும் தோன்றுகின்றன. ஒருபொருள் அழிந்து மற்றொரு பொருள் உற்பத்தியாவதாகிய இந்தப் பெருங்காரியம் வருஷந்தோறும் நடந்தேறிவராவிடின், பொன்னிறமாய்ப் பழுத்து முதிர்ந்த தானியங்களை அறுவடைசெய்யும்படியான காலம் ஒருபோதும் உண்டாகாது.

**மூன்றாவது :** ராஜநீதியினின்றும் பிறழாத ஒரு ராஜன் தன் குடிகளைச் செவ்வையாய்ப் பரிபாலிப்பதுபோலக் கடவுளும் ஜீவகோடிகளை மிகவும் பரிவுடன் பரிபாலித்து வருகிறாரென்பது தெளிவாய் விளங்குகின்றது.

பிரதி வருஷமும் இந்தப்பூமியில் அசேதனங்களான விருக்ஷம்முதலிய வடிவமாய்க் கோடானுகோடி ஜீவராசிகள் வந்து பிறக்கின்றன. அவை இவ்வளவென்று கணக்கிட்டுச்சொல்ல அவற்றைப் பிறப்பித்தவனாலல்லது மற்றெவனாலுமாகாது. அப்படியுண்டானவைகளுள் அநேகம் மறுபடி பற்பல விருக்ஷாதிகள் உண்டாவதற்கு விதைகளாக ஏற்படுத்தப்படுகின்றன. நட்டதெல்லாம் செடியுமல்ல பெற்றதெல்லாம் பிள்ளையுமல்ல என்பதுபோல, விதையாகப் போட்டவற்றுள்ளும் சிலவற்றைப் பக்ஷி பூச்சிமுதலியவை பொறுக்கிப் புசித்துவிடுகின்றன; சில முளைக்கமாட்டாமல் பூமியிலேயே நசித்துப்போகின்றன.

வயல்களை நாம் எவ்வளவு கருத்தாய்ச் செப்பனிட்டு விதை விதைத்துப் பாதுகாத்துக்கொண்டிருந்தாலும், அநேகர் எண்ணுகின்றபடி விதைத்தவிதையெல்லாம் முளைக்கின் றன வென்பதில்லை. சில அழிந்துபோகின்றன.

இப்படியெல்லாம் ஆவதற்கு நிமித்தம் யாதென்பீர் களோ? அவற்றைக் கண்டறிந்துசொல்ல நம்மாலில்லை. இவ்விஷயத்தில் நமக்கு ஒன்றும் தெரியாதென்று ஒப்புக் கொள்வதே உத்தமமானது. காரியங்கள்மாத்திரம் நமது கண்ணெதிரில் நடந்தேறிவருவதால் இல்லை யென்று மறுக்க முடியாது. ஆயினும் வருஷந்தோறும் விடாமல் எப்போதும் அனந்தகோடி உயிர்கள் அழிவது இன்னவி தம் என்பதுமாத்திரம் எவரும் கண்டுகொள்ளக்கூடாத ஒரு நுட்பமான விஷயமாயிருக்கின்றது. ஆதலின் யாவும் கடவுளுடைய கட்டளைப்படியே தவறுமல் நடந்தேறிவரு கின்றன.

**நான்காவது:** அதற்குவேண்டிய உபாயங்களைச் சரி யாய் உபயோகிக்கவேண்டுவது நமது கடமையென்ப தைப் பூமி நமக்குத் தெளிவாய்த் தெரிவிக்கின்றது.

இப்பூமியில் விளைகின்ற எல்லாப் பொருள்களும் தமக்குத்தாமே மேன்மேலும் வளர்ந்து விருத்தியாகுந் திறமையுடையவைகளாயிருக்கின்றன. இது தோட்டக் காரர்களுக்கும் வேளாண்மை செய்பவர்களுக்கும் செவ் வையாய்த் தெரியும். அவர்களுடைய முக்கியமான காரி யங்களுள் இதுவும் ஒன்றுகையால், அவர்கள் அவசியம் இதைக் கவனித்திருப்பார்கள். செடி கொடி முதலியவை களுக்கெல்லாம் அவர்கள் பிராணபிரதிஷ்டையும் செய்ய மாட்டார்கள்; அவைகளைப் பலிக்கும்படியாகவும் செய்ய மாட்டார்கள். அவைகள் உண்டாகும்போதே நன்றாய்

வளர்ந்து விருத்தியாகவும் பலிக்கவும் வேண்டிய திறமை இயற்கையாய் அவற்றுள் பொருத்தப்பட்டிருக்கின்றன. தமக்குத்தாமே பயிர்கள் பூமியினின்றும் உற்பத்தியாகின்றன. அப்படி ஒருகால் உற்பத்தியான பயிர்கள் தாமே மேன்மேலும் விருத்தியாகும்படியான வல்லமையுடையவைகளாகின்றன. நிலத்தை நன்றாய்ப் புழுதியாகும்படி யுழுது எரு விட்டு, நீர்க்கால்கள் வாட்டமாய் வெட்டித் திட்டமாய்த் தண்ணீர்பாய்ச்சிக் களைபறித்துப் பக்குவமாய்ப் பாதுகாத்து வரவேண்டியது தோட்டக்காரர்களுடைய கடமை; அப்படிச் செய்வார்களானால் பின்னும் விசேஷமான பயன் உண்டாகும்.

---

## 8. தாகம் அல்லது நீர்வேட்கை.

1. பசியைப்பார்க்கிலும் தாகம் கொடுமையானது. கெட்டிப்பான உணவில்லாமற்போனாலும் நாம் சில்வாரம்பிழைத்திருக்கலாம்; குடிக்கத் தண்ணீராவது உண்ணும் உணவுகளில் பசையாவது இல்லாமற்போனால் சிலநாளிலேயே நாம் இறந்துபோவோம். ஏனெனில் நமது தேகத்தில் மற்றவைகளினும் ஜலபாகமே அதிகமாகையால், நாம் ஜீவித் திருப்பதற்கு மற்றப் பொருள்களைப்பார்க்கிலும் நீரே அதிகம் வேண்டும்.

2. நம் உடம்பில் சற்றேறக்குறைய முக்கால் பங்கு தண்ணீராம். அதாவது 100 ராத்தல் நிறையுள்ள ஒரு சரீரத்தில் நீரெல்லாம் சுண்டிப்போனால் பின்பு அந்த உடல் 30 ராத்தல் தான் இருக்கும். தினந்தோறும் நமது உடலிலிருந்து நீரானது வேர்வையாயும் சுவாஸமாயும் வெகு

வாய் வெளியேவரக் காண்கிறோமே. அப்படி வெளியே வருவதனால் குறைவாய்ப்போன பகுதிக்குத் தக்கவளவு நீர் குடிக்காவிடின் அப்போது தாகமெடுத்து உள்ளே நீர் மிகவும் மிதமாய் இருக்கிறதென்பதை நமக்குத் தெரிவிக்கின்றது.

3. கோடைகாலங்களில் வியர்வை அதிகமாய் உண்டாகின்றது. ஆதலால் குளிர்காலத்தைப்பார்க்கிலும் அக்காலத்தில் அந்தக் குறைவுக்கு நிறைவுசெய்ய மிகுதியாக நீரை ஏற்றுக்கொள்ளவேண்டும். இந்தக் காரணத்தாலேயே எப்போதும் வெயிலிலேயேயிருந்து உடம்பெல்லாம் புழுங்கப்புழுங்க அதிகமாக வுழைத்து வேலைசெய்கிறவர்கள் நிழலில் உட்கார்ந் திருப்பவர்களைக்காட்டிலும் அதிக தாகமெடுத்து மிகுதியாய்த் தண்ணீர் குடிக்கிறார்கள்.

4. தேகத்திற்கு நாம் நீரை ஏற்றுக்கொள்வது நீரைக் குடிப்பதனால் மாத்திரமேயல்ல, உணவுகளை உண்பது முதலியவற்றாலுந்தான். எப்படியெனில், புசிக்கிற எல்லாப் பண்டங்களிலும் ஜலமிருக்கின்றது; புசிக்கும் அன்னத்திலும் பாதி நீர்தான்! சில பழங்களில் நிரம்ப நீரிருக்கின்றது. அதனால் அவைகளைப் புசித்தமாத்திரத்தில் தண்ணீர் குடித்தாற்போலத் தாகமடங்கிப்போகும். பால், சாறு, குழம்பு, சாராயவகைமுதலிய திரவபதார்த்தங்களெல்லாம் வெகுவாய் நீராகவேயிருக்கின்றன.

5. மேலும் சர்மத்தின்வழியாயும் நீர் உட்செல்லுகின்றது. வெகுதாபமாயிருக்கும்போது நீராடினால் அந்தத் தாபம் தணிகின்றதல்லவா? ஆதலால் நீராடும்போது மேலேவிழுகிற ஜலம், காற்றிலடித்துக்கொண்டுவருகிற

ஜலம் முதலியவைகள் சர்மத்திலுள்ள மயிர்க்கால்களின் வழியாய் உட்செல்லுகின்றன.

6. குளிர்ச்சியான தேசங்களிலிருப்பவர்களினும் இத்தேசம் போன்ற உஷ்ணபூமியிலிருக்கின்றவர்கள் தாபத்தால் வெகு வருத்தப்பட்டு, மிகுதியாகத் தண்ணீர் பருகுகின்றனர்.

7. தாகமெடுத்தபோது குடிக்கத் தண்ணீரிருக்க, சிலர் வீண்செலவுசெய்து சாராயம்முதலியவைகளைக் குடித்து வழக்கம் பண்ணியிருக்கிறார்களே, அது எவ்வளவு புத்தியீனம்.

8. நாம் இயற்கையான நீர்வேட்கையை அடக்கவேண்டுமென்றால், அதற்குத் தண்ணீரே மிக ஆரோக்கியமான சிறந்தபானமாகும். நம்மையெல்லாம் படைத்து நமக்கு வேண்டியவைகளை அளித்திருக்கின்ற கடவுள் நமது சரீரத்தின் மேலுக்கும் உள்ளுக்கும் நன்மை செய்வதும் விடாயைத்தணிப்பதும் ஆரோக்கியமுமான தெள்ளிய நல்லநீரைப் பூமியெங்கும் வேண்டிய அளவு கொடுத்திருக்கிறார்.

9. பால் காப்பி தேத்தண்ணீர்முதலிய திரவபதார்த்தங்களை நாம் பருகுவது வெகுவாய் உடம்புக்குப் புஷ்டியும் பலமும் உண்டாவதற்கேயன்றித் தாகத்தை அடக்குவதற்கன்று.

10. இப்படி இயற்கையில் உண்டாகாத மற்றொருவகை தாகமுண்டு. அது வியாதியினால் உண்டாவது; அந்ததாகத்தைத் தணிப்பதற்குத் தகுந்தவழி அவ்வியாதியை விலக்குவது ஒன்றுதான்.

## 9. உழைப்பு என்பவள் பட்டணம் சென்ற கதை.

1. வறுமையின் மகளான உழைப்பு என்பவள் வெகு நாளைக்குமுன் ஆரோக்கியம் திருப்தியென்னும் இரண்டு பெண்களுடன் நகரத்திற்கு நெடுந்தூரத்தில் ஒரு மலையடிவாரத்திலே சிறிதாகப் பர்ணசாலையொன்று போட்டுக்கொண்டு அதில் அமைதியாக வாழ்ந்திருந்தனள். அவர்களுக்குக் கனவான்களுடைய பழக்கம் அணுவளவுமில்லை. அக்கம் பக்கத்து கிராமத்தார்தவிர மற்றவர்களோடு அவர்கள் உறவாடியறியார்கள். இப்படியிருக்க ஒருநாள் தேசயாத்திரை செய்து உலகவினோதங்களைப்பார்க்க நிச்சயித்து அவர்கள் தம் உற்றாரைப்பிரிந்து உறைவிடம்விட்டுச் சென்றார்கள். உழைப்பானவள் வலதுகையில் ஆரோக்கியத்தையும் இடதுகையில் திருப்தியையும் பற்றிக்கொண்டு பெருமையாகப் பெரும்பாதை வழியே போயினள். ஆரோக்கியம் தன் தாய்க்கு வழியில் வருத்தம் தோன்றாதபடி உல்லாசமாய்க் கதைசொல்வதும் மதுரமாய்ப் பாடுவதுமாக மனமகிழ்ச்சியுண்டாக்கிக்கொண்டு சென்றாள். இடதுபுறத்தில் திருப்தியும், சிரித்தமுகமும் சந்தோஷப் பேச்சுமாய்த் தாய்க்கு வழியில் வருத்தமுண்டாகாமல் கைலாகு கொடுத்து, தங்கையும் உள்ளமுவந்து தீவிரமாய் வழிநடக்கும்படி உற்சாகப்படுத்திக்கொண்டுபோயினள்.

2. இவ்வண்ணம் அவர்கள் காடுகளும் நாடுகளும் நகரங்களும் கடந்துகொண்டு கடைசியில் அத்தேசத்துப் பிரதான பட்டணம்போய்ச் சேர்ந்தார்கள். அப்பட்டணத்துக்கோபுரவாயிலில் புகுவதற்கு முன்னமே தாயானவள் மக்களைப்பார்த்து, "குழந்தைகாள், நீங்கள் இந்நகரத்துப் பெருமைகளைப்பார்த்து என்னை ஒருபோதும் கைசோர

விடாதேயுங்கள். ஒருவரைவிட்டு ஒருவர் பிரிவோமாயின் நாம் மூவரும் அடியோடு அழிந்துபோவோமென்பது தெய்வசங்கற்பமாதலின் எல்லோரும் கட்டிக்காத்திருக்க வேண்டும்" என்று ஆணையிட்டுக் கூறினள். ஆயினும் ஆரோக்கியம் அதிக உல்லாசமுடையவளாகித் தாய் சொல்லைத் துறந்து தன் மனம்போனபடி நடக்கப்புகுந் தாள். அவ்வாறு திரிகையில் கெட்டவழியாய்ப் பெருந் தின்றியோடுகூடிக் கெட்டு வியாதியென்னும் மகளைக் கருத்தரித்தவளாகிப் பிரசவவேதனையில் இறந்துபோ னாள். திருப்தியும் தன் சகோதரியைவிட்டுப் பிரிந்து போகவே சோம்பலின் நயவஞ்சனைக்கு உட்பட்டுப் பின்பு பேர்கூடத் தெரியாமல் அழிந்துபோனாள். உழைப்போ தன் மக்களைக் காணாமல் மிகவும் துன்பமுற்று அவர்க ளைத் தேடி எங்கும் அலைந்துதிரிந்து நடுவழியே ஆயாச மென்பவன் கையிற் பிடிபட்டு மிகவும் வருந்தி இறந்து போயினாள்.

## 10. தென்னிந்தியாவின் சீதோஷ்ணநிலை.

1. இத்தென்னிந்தியாவில் சாதாரணமாய்ச் சமநிலத் தாக்குகளிலே வருஷத்தில் நான்குமாதம் இப்படிப்பட்ட தென்று வாயினால் சொல்லக்கூடாதபடி அவ்வளவு உஷ் ணமாயும், மற்றொரு நான்குமாதகாலம் மிகவும் சீதமாயு மிருக்கின்றன. மற்ற நான்குமாதமாத்திரம் அப்படியில்லை; எவர்க்கும் அனுகூலமாயிருக்கின்றது. கோடையின்கொ டுமை வடமேற்கு மாகாணங்களைப்போல அவ்வளவு உக் கிரமானதல்லவென்றாலும், கோடைக்காலமும் பனிக்கால மும் மிகவும் சகிக்கக்கூடாதனவும், செளக்கியத்திற்கு ஒவ்

வாதனவாயுமிருக்கின்றன. தென்னிந்தியாவின் சீதோஷ்ணநிலையானது ஓரிடத்திற்கு மற்ருேரிடமும், ஒருகாலத்திற்கு மற்ெருருகாலமும் வெகுவாக வேறுபடுகின்றது. மலையடிவாரங்கள் எப்போதும் அசௌக்கியமானவைகளே. சில பருவங்களில் நோயுண்டாவதுபற்றிக் குடியிருப்புக்கே யோக்கியமாகாதவையாய் இருக்கின்றன. நெருக்கமாய் மரஞ்செடிகள் அடர்ந்த பிரதேசங்களும் அப்படிப்பட்டவைகளே. ஆற்று முகத்துவாரங்களை யடுத்த பள்ளத்தாக்கான சதுப்புநிலங்கள் முதலில் உருவமைந்தபடியே இருக்கின்ற வரையில் கெடுதியானவைகளே; கரைகட்டி நீர்க்கால்கள் வெட்டிப் பயிர்செய்தால் மேட்டு நிலங்களைப்போலச் சௌக்கியமானவையாகின்றன. முன் குளிர் காய்ச்சல் முதலிய நோய்களுக்கு நல்லிருப்பிடமாயிருந்த, கோதாவரி, கிருஷ்ணை இந்த நதிகளின் முகத்துவாரத்தைச் சார்ந்த சதுப்புநிலங்கள் இப்பொழுது அணைகளும் நீர்க்கால்களும் கட்டிச் சௌக்கியமான இடங்களாக்கப்பட்டிருக்கின்றன. சுகாதார விஷயங்களைப்பற்றி அவ்வளவாக நோக்கம் எடுத்துக்கொள்ளாதவர்கள் சதுப்புநிலங்களில் வியாதிகள் உற்பத்தியாகின்றனவென்பதை அநேகமாய்த் தெரிந்துகொள்ளாமலே இருக்கின்றனர்.

2. கடற்கரையோரமாய் விசாலமாகப் பரந்திருக்கின்ற நீர் வற்றிய சமபூமிகளும், மைசூரைச்சார்ந்த காற்றுவீசுகின்ற மேட்டுத்தாக்குகளும் இத்தென்னிந்தியாவில் இயற்கையாகவே சௌக்கியமான பிரதேசங்கள். மேற்குக்கடற்கரை சிறிது நீர்க்கசிவான நிலமாயினும் விருக்ஷவகைகள் செழித்துவளரும் இடமாயிருக்கின்றது. மிகவும் உஷ்ணமான காலங்களில் மேற்குமலைத் தொடரைச்சார்ந்த மேட்

டுத் தாக்குகள் இராப்பொழுதும் காலைப்பொழுதும் எக்கா
லத்தும் குளிர்ந்திருக்கின்றன. நடுப்பகலில் வெயில் உக்
கிரமாயிருந்தாலும், ஏப்பிரல் மே மாதங்களில் உலைக்கூ
டத்துத் தீக்கானல்போலக் கர்நாடக தேசத்து வெளிக
ளில் வீசி யெரிக்கின்ற ஒருவிதமான நெருப்புக்காற்று
அவ்விடத்தில் கிடையாது. இம்மேட்டுத் தாக்குகளில்
மழைக்காலம் அசௌக்கியமானதன்று. மழைநாள் கழிந்
தவுடனே அம்மேட்டுப்பிரதேசங்களில் அடிக்கின்ற பல
மான காற்றானது நோய்க்கிடமான விஷப்பொருள்களை
அப்புறம் அடித்துக்கொண்டுபோய் விடுகின்றன வென்கி
றார்கள். அந்தக் காற்றுதாராளமாய் வீசுவதற்கு வழியில்
லாமல் எவ்வகையிலாவது மறைக்கப்பட்ட திருப்பதியைப்
போன்ற மேட்டுநாடுகள் மிகவும் நோய்க்கிடமாயிருக்கின்
றன. அப்படியன்றித் தாராளமாய்க் காற்று வீசும்படி
வெளியாய் அதையடுத்திருக்கின்ற அதேவிதமான பிரதே
சங்களோ அப்படி யிருப்பதில்லை. மலைநாடுகளின் இயற்
கை யொருவிதமாயிராமல் பலவகைப்பட்டிருப்பதற்குக்
காரணம் இதுதான். பருவங்களைப்பற்றிப் பார்த்தால்
கோடைப் பருவமும் கார்ப்பருவமும் மிகவும் ஆரோக்கிய
மானவை. பருவம் மாறுகின்ற காலமே எப்பொழுதும்
கெடுதியானது. மழைக்காலத்தை யடுத்துவருகின்ற
குளிர்காலமானது விசேஷமாக மரஞ்செடிகளடர்ந்த
விடங்களில் சகிக்கக்கூடாது. குளிர்காலத்துப் பின்பாக
மாகிய ஜனவரி பெப்ருவரி மாதங்களோ அப்படியல்ல;
ஆரோக்கியமாயும் இனிப்பாயு மிருக்கின்றன. நன்றாக
மழைபெய்கிற காலங்களில் காடுகளும் மலைச்சாரல்களும்
சிறிதும் அபாயத்துக்கு இடமில்லாமலிருப்பதற்குக் கார
ணம் பெய்கின்ற மழைத்தாரைகளால் அங்குள்ள விஷக்
காற்றுகள் ஒதுக்கப்படுகின்றன வென்பதுதான்.

## 11. சிந்துபாத்து நாவிகன் கதை.

1. முன்னொருகாலத்திலே பாக்தாத் என்னும் பட்டணத்தில் சிந்துபாத்து என்று பிரசித்தனான தனவான் ஒருவன் இருந்தான். அவன் ஒருவர்த்தகன்; ஆயினும் அவன் பலதரம் தேசாந்தரங்களுக்குக் கப்பல்யாத்திரை செய்தவனாதலால் அவனுக்குச் சிந்துபாத்து நாவிகன் என்றே பெயர் வழங்கிவந்தது. அவன் யாவரிடத்திலும் ஆதரவும் தாராளமனதுமுடையவன். மாலைவேலைகளிலும், போஜனம்செய்தபிறகும் தன் பந்துமித்திரர்களைச் சுற்றி உட்கார வைத்துக்கொண்டு, தான் அங்கங்கே பார்த்த பல அதிசயங்களையும், கடல்யாத்திரைசெய்த காலங்களில் தனக்கு நேர்ந்த பல துன்பங்களையும் வெகு சந்தோஷமாய் அவர்களுக்கு எடுத்துரைப்பான். ஒருதடவை யாத்திரை செய்தபொழுது தனக்கு நேர்ந்தவைகளைப்பற்றி அப்போது அவன் ஒருநாள் சொன்ன கதையாவது:—

2. முதலில் இரண்டு மூன்றுதரம் யாத்திரைபோய் வந்ததில் என் வர்த்தகங்களெல்லாம் நன்றாய்க் கைகூடிவந்து பொருளும் விசேஷமாய்க் கிடைத்ததென்றாலும், அந்தப் பொருளை வைத்துக்கொண்டு அவ்வளவோடு திருப்தியாய் வீட்டிலேயே யிருந்து வீண்பொழுது கழிக்க எனக்கு விருப்பம் உண்டாகவில்லை. ஒவ்வொரு யாத்திரையிலும் நான் பட்டபாடுகளெல்லாம் என் மனதில் தற்காலத்தில் நேர்ந்தவைபோ லிருந்தாலும், அதனாலேயும் எனக்கு யாத்திரை செய்வதில் வெறுப்புண்டாகவில்லை. அந்த யாத்திரையில் எள்ளளவும் பயன் அடையாமல் வீணே நான் பட்ட பெரும் பாடுகளையெல்லாம் சொல்லுகிறேன் கேளுங்கள்:

3. அந்தத்தடவை கடல்யாத்திரை செய்யவேண்டுமென்றுஎண்ணமுண்டானவுடனே நானே புதிதாய் ஒரு கப்பல் சித்தம்செய்து, என்னுடைய சரக்குமட்டுமே அந்தக் கப்பலுக்குப் போதாதென்று கண்டு, இன்னும் இரண்டு மூன்று வர்த்தகர்களையும் கூட்டிக்கொண்டு, "கரும்புள்ள போதே ஆலையாடிக்கொள்" என்றபடி காற்று வாட்டமாய் வீசின ஒருநாளில் பாய்விரித்துப் புறப்பட்டேன்.

4. கடலிலேயே சிலநாள் சென்றபிறகு நிர்மானுஷியமான ஒரு தீவண்டை போய்ச்சேர்ந்தோம். எங்களுள் சிலர் பைகளில் நல்ல தண்ணீர் நிரப்பிக் கொண்டுவருவதற்காக அந்தத் தீவுக்குப் போனார்கள். அங்கே மிகவும் பெரியதான முட்டை யொன்று இருந்தது. வெளேலென்று ஒரு சிறு குன்றளவு இருந்த அந்த முட்டையைக் கண்டு, இதென்னவென்று நான் பிரமித்துநின்றேன். கூடவந்த சில கப்பற்காரர்கள் இது கண்டபேருண்டபட்சியின் முட்டையென்றார்கள். அந்தப் பக்ஷியைப்பற்றி அடிக்கடி கேள்வியே ஒழிய, அப்படி ஒரு பக்ஷி இருக்குமென்று அதுவரையில் நான் சிறிதும் நம்பினதில்லை. அது ஒரு முட்டைதானென்று எனக்கு மெய்ப்பிக்கும்பொருட்டு அவர்கள் அதைக் கோடரியால் பிளக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் பிளந்துகொண்டிருக்கையில், மேகம் வந்து மறைப்பதுபோலப் பெருநிழலொன்று கீழேதெரிந்தது. அதென்னவென்று அண்ணாந்துபார்த்தேன். மிகப்பெரிதான இரண்டுபறவைகள் தலைக்குமேல் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அதைக் கண்டவுடனே நாங்கள் வெகு சீக்கிரமாய் ஓடிக் கப்பலில் ஏறிக்கொண்டு பாய்விரித்துத் தக்ஷணமே அந்தத் தீவைவிட்டுப் புறப்பட்டோம்.

அதற்குள் அவ்விரண்டுபக்ஷிகளும் தம் முட்டையை

வந்துபார்த்து, அது உடைந்துபோயிருப்பதுகண்டு மிக வும் பயங்கரமாய் ஒரு கூச்சலிட்டு, இரண்டும் இரண்டு பெரும் பாறைகளைத் தூக்கிக்கொண்டு (அந்தத் தீவிலே கற்கள் அதிகம்) எங்கள் கப்பலைத் துரத்தி ஓடிவந்தன.

5. கப்பலுக்குச் சரியாய்வந்ததும் சிறிதுநேரம் சிறகுகளை நன்றாக விரித்துக்கொண்டு அங்கேயே அசைவற்று நின்று நன்றாய்க் குறிபார்த்துக் கொண்டுவந்த கற்களைக் கீழே நழுவவிட்டன. மாலுமி மிகவும் தந்திரசாலியாயிருந்ததனால், அந்தக் கல் விழப்போகிற தருணங்கண்டு அது எங்கள்மேல் விழாதபடி சரேலென்றுகப்பலை அப்புறம் திருப்பினான். அதனால் முதலில் விழுந்தகல்லு கப்பலில் விழவில்லை; கொஞ்சம் குறிதப்பிக் கப்பலோரமாய்க் கடலில் விழுந்தது. வீழ்ந்த வேகத்தில் அந்தப் பாறை கடலின் அடிப்புறங்கூடச் சிறிதுநேரம் கண்ணுக்குத் தெரியும்படி அவ்வளவு பெரியபள்ளமாய்க் கடலைத் தொளைத்துக்கொண்டு போயிற்று. மற்றொருபறவை அப்படிக் குறிதப்பிக் கல்லைப் போடவில்லை. எங்களுடைய துரதிர்ஷ்டத்தால் அதன் கல் நேராக நடுக்கப்பலில் விழுந்து கப்பலைச் சுக்கல் சுக்கலாக்கிவிட்டது. அந்த அபாயத்தால் அறைபடாமலும் கடலில் மூழ்காமலும் தப்பினவன் நான் ஒருவனே.

6. அந்தப் பாறை வீழ்ந்த அதிர்ச்சியினால் உண்டான மயக்கந் தெளிந்த பின்பு கண்ணை விழித்துப்பார்க்கையில், நான் தண்ணீரில் விழுந்து தத்தளித்துக்கொண்டிருந்தேன். அத்தருணத்தில் அண்டையில் மரத்துண்டுகள் பல மிதக்கக்கண்டு அவற்றுள் ஒன்றில் ஏறிக்கொண்டு திரும்பி அந்தத் தீவுக்கே போகலாமென்று பார்த்தேன்; காற்றுப் பிரதிகூலமாகவீசி மற்றொரு வழியில் தள்ளிக்

கொண்டு போய்விட்டது. மேலும் போதாக்குறைக்குப் பொழுதுபோகிற தருணமாயிற்று. அப்போது வெகு தூரத்தில் ஏதோ ஒரு கப்பல் போகககண்டு அவர்களா வது துணைசெய்ய வருவார்களோவென்று என்னால் கூடி யவரையில் உரத்துக் கூவினேன்: கைகளையும் உயரவெ டுத்துக் குறிகாட்டினேன். ஒன்றும் பயன்படவில்லை. அந்தக் கப்பல் அப்படியே போய்விட்டது. இராப்பொ ழுதாய் இருளும் நன்றாய்மூடிக்கொண்டது. அப்பொழு தும் எனக்கு நிராசைபிறவாமல், உடனே கடலில் மூழ் கிப்போவதைவிட இப்படியேயாவது சிறிதுநேரம் அல் லாடிக்கொண்டிருப்பதே நலமென்று, தண்ணீர் தள்ளிக் கொண்டு போகிறவழியே போய்க்கொண்டிருந்தேன்.

7. அப்படியிருக்கச் சூரியோதயமாகி எதிரே பார்வைக் கு மிகவும் செழிப்பான தோப்புகள் அடர்ந்த தீவுமொன்று தெரிந்ததென்றால், அப்போது எனக்கு எவ்வளவு ஆநந் தம் உண்டாயிருக்குமோ அதை நீங்களே யோசித்துப் பாருங்கள். வெகு வருத்தப் பட்டுக் கட்டையைத் தள் ளிக்கொண்டு அந்தத் தீவைநோக்கிச் சென்று, கடைசி யில் அவ்விடம் சேர்ந்து களைதீரும்படி அங்கே ஒரு பசும் புல் தரையில் தங்கியிருந்தேன். அந்தத் தீவுமுழுதும் மதுரமான பழங்கள் நிறைந்த பல விருட்சங்களும், அழ கான பற்பல செடிகளும், மிகவும் தெளிவான நீரோடை களுமாய் ஒரு சிறந்த உத்தியானவனம்போலிருந்தது. அங்கிருந்தவைகளுள் மிகவும் சிறந்த சில பழங்களைப் பறித்துப் புசித்துக் கொஞ்சம் தண்ணீரும் குடித்துத் திருப்தி அடைந்தேன்.

8. கடலோரத்திலிருந்து அந்தத் தீவுக்குள் சிறிதுதூரம் போகையில் அங்கே ஒரு சிறிய நீரோடைக் கரையில்

ஒரு கிழவன் உட்கார்ந்திருந்தான். இவனும் நம்மைப் போலவே கடலில் அடிபட்டு வழிதப்பி வந்திருப்பவனென்றெண்ணி நான் அவனண்டைபோய் அவனுடைய யோகக்ஷேமங்களை வினவ, அவன் சிறிதளவு தலையசைத்தானேயல்லது மற்றப்படி மறுமொழியொன்றும் உரைக்கவில்லை. நீ இங்கே என்ன செய்கிறுயென்று நான் அவனை மறுபடியுங்கேட்க, அதற்கும் அவன் ஒன்றும் விடை கொடாமல், அவ்வோடையின் எதிர்க்கரையில் உள்ள பழங்களைப் பறித்துத் தின்னவேண்டுமென்றும், அதற்காகத் தன்னைத் தோளில் ஏற்றிக்கொண்டு அவ்வோடையின் அக்கரை சேர்க்கவேண்டுமென்றும் குறிகாட்டினன்.

9. அவன் மிகவும் தள்ளாதவனுயும் களைத்திருப்பவனுயும் தோன்றினதினுல், நான் மனமிரங்கி அவனுடைய வேண்டுகோளுக்கு உடன்பட்டு அவனைத் தோளிலே தூக்கிக்கொண்டு அக்கரை சேர்ந்து அவன் கீழேவிழும்படி குனிந்தேன். அப்போது அவன் செய்ததை நினைத்தால் எனக்கு இன்னும் திகில் உண்டாகின்றது ; அந்தக் கிழவன் கீழே இறங்குவதைவிட்டு, என் கழுத்து நசுங்கும்படி உறுதியாய்க் காலால் கட்டிக்கொண்டான். உபகாரத்துக்கு அபகாரம் வருவது துரதிர்ஷ்டம் என்பதுபோல், அவன் கட்டின கட்டைத் தாங்கமாட்டாமல் நான் சோர்ந்து அப்படியே கீழே விழுந்தேன்.

10. அப்போதும் அந்தக் கிழவன் தோளைவிட்டு இறங்காமல், எனக்குக் கொஞ்சம் சோர்வு தெளிந்தவுடன் தன் காலால் என் விலாப்புறங்களில் உதைத்து, என்னை எழுந்து அண்டையிலிருந்த மரங்களின்கீழ்ப் போகச்செய்து; என் தோளின்மேலிருந்தபடியே சுகமாய்ப் பழம்பறித்துத் தின்ன ஆரம்பித்தான். என்னைப்பிடித்த பிடியை அவன்

மறுபடி விடவேயில்லை; இரவில் படுக்கும்போதுகூட என் கழுத்தில் காலைக்கட்டினபடியேபடுப்பான். பொழு துவிடிந்ததும் அவன் முன்போலவே என்னைக் காலால் உதைத்துக் கிளப்பி அந்தத் தோட்டம்முழுதும் சுற்று விப்பான்.

11. இப்படிஇருக்க ஒருநாள் நான், அங்கோரிடத்தில் உலர்ந்த சுரைக்காய்கள் அநேகமிருக்கக்கண்டு, அவற்றுள் மிகப் பெரிதாய் ஒன்றையெடுத்து அதன் உட்புறமெல் லாம் நன்றாய்க் குடைந்துகழுவிவிட்டு, அத்தோட்டத் தில் அபரிமிதமாக விளைந்திருந்த திராக்ஷைப்பழங்களைப் பறித்து, அவற்றின் ரஸத்தை அந்தக் குடுக்கைநிரம்பப் பிழிந்து அதை அத்தோட்டத்தில் அடையாளமாய் ஓரி டத்தில் புதைத்துவைத்தேன். பின்பு சிலநாள்கழித்துப் பார்க்கையில் அந்த ரஸம் ஒருவித மதுரமான சாராயமா யிருந்தது. அதில் சிறிதளவுதான் நான் குடித்தேன். அதைக் குடித்தவுடனே என் உடம்பில் ஒருவிதமான உற்சாகமும் மயக்கமும் உண்டாகி, போகிறவழியெல்லாம் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் போகும்படியாயிற்று.

12. அந்தச் சாராயத்தால் எனக்கு மிகச் சுறுசுறுப்பும் உற்சாகமும் உண்டானது கண்டு, என்மேல் ஏறிக்கொண் டிருந்த கிழவன் அதில் தனக்கும் கொஞ்சம் கொடுக்கும் படி குறிகாட்டினான். அப்படியே அந்தச் சுரைக்குடுக் கையை நான் அவன்கையிலே கொடுக்க, அவன் அதில் ஒரு துளிகூட மிகுத்தாமல் எல்லாவற்றையும் குடித்து விட்டான். அதனால் அவனுக்கு உடம்புதெரியாமல் அதிக மயக்கமுண்டாயிற்று; ஒருவிதமாகப் பாட ஆரம்பித்தான். அம்மயக்கத்தால் என் கழுத்தைக் கட்டியிருந்த கட்டும் கொஞ்சம் தளர்ந்தது. அத்தருணங்கண்டு "சமயம்வாய்த்

தால் நமனையும் வெல்லலாமே'' என்றபடி, நான் அவனைத் திடீரென்று கீழேதள்ளி உடனே ஒரு பெரும் பாறையை எடுத்து அவன் தலையிலே போட்டேன். பின்பு அவன் எழுந்திராமல் அங்கேயே விழுந்துகிடந்தான். அவன் இறந்தேபோனானே அல்லது மூர்ச்சைபோய்க் கிடந்தானோ அது எனக்குத் தெரியாது.

13. இவ்விதம் அந்தப் பயங்கரமான பெருஞ்சுமையை ஒழித்துவிட்டு நான் சீக்கிரமே கடற்கரைபோய்ச் சேர்ந்தேன். அப்போது நல்லதண்ணீர் எடுத்துக்கொள்வதற்காகச் சிலகப்பற்காரர்கள் அங்கே வந்து இறங்கியிருந்தார்கள். அவ்விடத்தில் நான் பட்ட பாட்டையெல்லாம் அவர்களுடன்சொல்ல, அவர்கள் என்னையும் தங்கள் கப்பலில் ஏற்றிக்கொண்டு போனார்கள். அந்தத் தீவில் என்னை அப்பாடு படுத்தின கிழவனைப்பற்றி அவர்களுக்கு முன்னமே தெரியுமாம். நாவிகர்களெல்லாரும் அவனுக்குக் கடற்கிழவனென்று பெயரிட்டிருக்கிறார்களாம். இப்படியாக நான் அந்தத் தடவை பலவிதமாய்த் துன்பப்பட்டுக் கடைசியாய்த் தெய்வசகாயத்தால் வீடுவந்து சேர்ந்தேன் என்றான்.

## 12. ஸ்ரீரங்கபட்டணம்.

1. பெங்களூருக்கு அருகிலுள்ள அங்கிலேயப் படைநிலைக்கு எழுபத்தெட்டு மைல் தூரத்தில் காவிரியாற்றினால் நாற்புறமும் சூழப்பட்ட ஒரு தீவிலே, முன்னொருகாலத்தில் மிகப்பெருமையும் பிரசித்தியும் பெற்றிருந்த ஸ்ரீரங்கபட்டணத்துக்கோட்டையானது, நாளைக்கும் பல பிரயாணிகளுக்குப் புதுமையான காட்சியளிக்கின்றது. அக்

கோட்டை மைசூர் நகரத்திலிருந்து கொஞ்சம் குறையக் காததூரத்திலுள்ளது. வெளிப்புறத்தினின்று பார்ப்பவர் களுக்கு அக்கோட்டை, முன் 1799-ஆ மேயீ 4வ காலை யில் அதை முற்றுகை போட்டுக்கொண்டிருந்த ஜெனரல் ஹாரிஸ் என்னும் சேனாபதியினால் செலுத்தப்பட்ட சேனை கட்கு எவ்விதமாய்க் காணப்பட்டதோ, அவ்விதமே இன் னும் காணப்படுகின்றது. மிகப்பிரசித்தமான அந்நாளில் அந்தச் சேனை அக்கோட்டைக்குள் புகுந்த சிறுவழி இன்னும் அப்படியே அங்கிலேயருடைய பராக்கிரமத் திற்கு ஒரு வெற்றிக்கொடிபோலப் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. அக்கோட்டை மதில்சுவர்களில் முன்போ லப் பீரங்கிகள் ஏற்றப்பட்டிருக்கவில்லையென்ற குறை யொன்றேயொழிய மற்றப்படி அது மாறுபாடின்றி முற் காலத்திலிருந்த நிலையிலேயே நிற்கின்றது. தனது வாலிபத் திலும் பருவகாலத்திலும் இத்தென்னிந்தியா முழுதும் அஞ்சி நடுங்கத்தக்க நிலையிலிருந்து, இப்போது அவ்வாண் மை அத்தனையும் அடங்கி, மேனாட்டுத் தீவிலிருந்துவந்து ஜயங்கொண்டவர்க்குத் தொண்டு பூண்டிருக்கும் அக் கோட்டையைப் பார்க்கையில், கண்ணும் கெட்டுக் கைப் படையும்போய்த் தவிக்கும் ஒரு கொடிய ராக்ஷதன்போ லத் தோன்றுகின்றது.

2. இவ்வண்ணம் ஸ்ரீரங்கபட்டணத்துக் கோட்டையின் பெருமை இக்காலத்திலும் வியக்கத்தக்கதாயிருக்கின்றது. அது பற்பல புதிய மாறுபாடுகளையும் கண்டிருக்கின்றது. ஒருவகையில் நோக்குங்கால் அக்கோட்டையின் சரித்தி ரம் இந்துதேசத்தின் வரலாறுகள் அனைத்தையும் ஒரு வாறு விளக்கும். ஆதியில் அது இந்துக்களால் ஆளப் பட்டு, பிறகு மகம்மதியர்களாலும் மகாராஷ்டிரர்கள



ஸ்ரீரங்கபட்டணத்துக் கோட்டை.

னும் அச்சமுறுத்தப்பட்டுச் சிலநாள் இத்தென்னிந்தியாவில் மகம்மதியருடைய முக்கிய ராஜதானியாயிருந்து, கடைசியில் இம்மூவரையும் அடக்கிய மேலதிகாரிகட்கு அடிமையாயிற்று. இவர்களுள் ஒவ்வொருவருடைய அரசாட்சிகாலத்துச் சரித்திரமும் மாட்சிமையுடையதாகும். அவற்றுள் அங்கிலேயருடைய ஆட்சியின் சரித்திரம்

முழுதும் மிகச் சிறப்புப்பெற்றிருக்கின்றது. ஸ்ரீரங்கபட்டணத்தையே ராஜதானியாகக்கொண்டு அந்நாட்டை ஆண்ட ஒரு வீரன் இச்சென்னைக் கோட்டைவாயிலில் வந்து அங்கிலேயருடன் சமாதான வுடன்படிக்கைபேசி இன்னும் ஒருநூற்றாண்டுகூடக் கழியவில்லை. அது நடந்த இருபதுவருஷகாலத்திலேயே இவ்விந்து தேசத்து மிகச் சமர்த்தர்களான கவர்னர் ஜனரல்கள் அக்கோட்டையை முற்றும் கீழ்ப்படுத்தினாலல்லது அங்கிலேயர்க்கு இத் தேசத்தில் உயர்வு கிடைக்கமாட்டாதென நினைத்து, அவ் வண்ணமேசெய்து இத்தென்னிந்தியாவில் தமக்கு எதிரி எவரும் தோன்றாவண்ணம் செய்துகொண்டனர்.

3. இந்த ஸ்ரீரங்கபட்டணம் காவிரியாறு இரண்டு கிளையாகப் பிரிந்து சூழ்ந்துகொண்ட ஒரு தீவிலிருக்கின்றது. அது ஏறக்குறைய மூன்றரைமைல் நீளமும், மிகவும் அகன்ற இடமான மத்தியபாகத்தில் ஒன்றரைமைல் அகலமும் உடையது. அக்கோட்டை இரண்டாயிரம் சதுரகஜம் பரப்புள்ளது. காவிரியாறு அக்கோட்டையை மேற்கிலும் வடக்கிலும் மிக நெருங்கிச் சூழ்ந்துகொண்டு அதற்கு ஒரு உத்தமமான அகழ்போல விளங்குகின்றது. ஜூன் மாதம் தொடங்கி நவம்பர் மாதம்வரையில் அவ் விடத்தில் அந்த நதியைக் காலால் நடந்தாயினும், படவு கொண்டாயினும், எவ்விதத்திலும் கடந்து போவது கூடாது.

4. ஹைதர், டிப்பு என்ற இரண்டு கொடும்புலிகளால் சிலகாலம் காக்கப் பட்டதனாலேயே ஸ்ரீரங்கபட்டணத் துக்கு அத்தனை சிறப்புண்டானது. முன்னே அவ்விடத் தில் ஒரு விஷ்ணு ஆலயமும் அதைச் சுற்றி ஒரு சிறு கிராமமுமே யிருந்தன. அவ்வாலயத்தைப்பற்றியே அவ்

விடத்துக்கு ஸ்ரீரங்கபட்டணமெனப் பெயர்வழங்கலாயிற்று.

5. ஸ்ரீரங்கபட்டணத்தைச் சுற்றிய இடமெல்லாம் நிலவள முள்ளதாய்ச் செழித்த தேசமாகையாலேயே அது ராஜதானியாகக் கொள்ளப்பட்டதென்னலாம். இத்தென்னிந்தியாவிலுள்ள மற்ற நதிகளைப்போலல்லாமல் காவிரி எக்காலத்திலும் அவ்விடத்தில் வெள்ளம் ஓடுகின்ற நதியாகையால், அதை அடுத்த நாடுகளுக்கெல்லாம் வாய்க்கால்களின் வழியால் அவ்வாற்றுநீர் கொண்டுபோய்ப் பாய்ச்சப்படுகின்றது. சுற்றுப்புறம் எங்கும் ஒருதுளிகூட மழை பெய்யாமல் ஏறக்கட்டியகாலத்தும் ஸ்ரீரங்கபட்டணத்தைச் சுற்றிய இடமெல்லாம் பயிர்களும் கருப்பஞ்சோலைகளும் அடர்ந்து அனைவரும் கண்குளிரக் காணத்தக்கதாயிருக்கின்றது.

6. ஆயினும் ஸ்ரீரங்கபட்டணம் வாஸத்துக்கு ஆரோக்கியமான இடமன்று. ஒருவித நச்சுக்காற்றினால் சுரம்கண்டு அங்கு உயிர்ச்சேதம் அதிகமாய் உண்டாகின்றது. ஆனது பற்றியே அங்கிருந்த அங்கிலேயருடைய காப்புச்சேனைகளெல்லாம் அப்புறப்படுத்தப்பட்டன. ஒரு பட்டாளம் மாத்திரம் அக்கோட்டைக்குக் காததூரத்தில் பிரஞ்சுராக்கு என்னும் ஒரு மேட்டுத்தாக்கிலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. காவிரி ஆற்றிலுள்ள பாறைகளின்மேல் சூரியகிரணம் உறைத்து அதன் உஷ்ணம் ஏறுவதனாலேயே அவ்விடம் அவ்வளவு ரோகபூமியாயிற்று என்கிறார்கள். அதனால் ஸ்ரீரங்கபட்டணத்தின் பெருமை அநேகமாய் இப்பொழுது அழிந்துபோயிற்று. அந்த இடத்துக்கு இப்போது இருக்கும் பெருமையெல்லாம் அதை முதலிலே ஒரு ராஜ்யத்துக்குச் சிறந்த ராஜதானியாக்கிய

மகம்மதிய சூரர்கள் இருவருடைய கோரிகள் கட்டப்பட்டிருப்பதனுலேதான். அவர்களுள் சிறந்தவனுன ஹைதரல்லியை மாத்திரம் அந்நாட்டார் வெகுவாக மறந்துவிட்டார்களாயினும், டிப்புசுல்தான் நடத்திவந்த பல அக்கிரமங்களால் அவனைமாத்திரம் இன்னும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டேயிருக்கின்றனர். டிப்பு மிகப் பிடிவாதமும் கொடுங்கோன்மையுமுடையவன்; அவனுடைய நடக்கையெல்லாம் பித்தனுடைய நடக்கைக்கு ஒப்பானவை. அவனை அடக்கம்செய்த இடத்தில் கட்டிய கோரியைப் பிரயாணிகள் பலர் போய்ப் பார்த்துவருகின்றனர். அந்தக் கோரியில், "அவன் தன் மதவிஷயத்திற் கொண்ட சத்தியத்திற்காகவே உயிரை விடுத்தான்; தன் மதஸ்தர்களுடைய மனதில் அவன் எப்போதும் நிலைகொண்டிருப்பவன்" என்னும் கருத்துள்ளமொழிகள் வரையப்பட்டிருக்கின்றன. அங்கிலேயர் தம்முடைய கைப்பொருளைச் செலவுசெய்து அதைப் பத்திரமாய்ப் பாதுகாத்து வருகின்றனர்.

7. ஸ்ரீரங்கபட்டணம் கோட்டைக்கு ஒருமைல் தூரத்தில் டிப்புவினுடைய துரியாதௌலத் என்னப்பட்ட விலாஸ மண்டபம் ஒன்று உண்டு. அது காவிரிக்கரையிலுள்ள ஒரு உத்தியானவனத்திலே கட்டப்பட்டிருக்கின்றது. அவ்வரண்மனை வெகு சிறப்பாகச் சிங்காரிக்கப்பட்டு மகம்மதிய சிற்பத்தின் கைதேர்ந்த திறமைபோல விளங்குகின்றது. அவ்வரண்மனை எப்புறமும் சித்திரங்களால் சிங்காரிக்கப்பட்டிருப்பதுமன்றி, கீழ்மாடியில் டிப்புவினது யுத்தவீரத்தைக்காட்டும் பல சித்திரப்பதுமைகளும் அணியணியாய் எழுதப்பட்டிருக்கின்றன. ஒரு புறத்தில் அவனுடைய சேனைகள் பிரஞ்சுக்காரருடைய உதவியுடன் எல்லாரு மீசையுடையவைகளாய் யுத்தத்திற்குப்போகும் பாவனை

யாக வரையப்பட்டிருக்கின்றன. இங்கு அச்சேனை பிரங்கிப்பட்டாளத்துடன் இங்கிலீஷ்காரருடைய சேனையை எதிர்க்கின்றது. அங்கிலேயர் இங்கு மிகவும் அபஜயப்பட்ட பாவனையாய் எழுதப்பட்டிருக்கின்றனராயினும் சதுரமாய் வளைத்துக்கொண்டிருக்கின்றனர். அந்தச் சதுரத்தின் மத்தியில் அங்கிலேயப் படைத்தலைவரான கர்னல் பேலியின் வடிவம், மிகவும் தொந்தரைபண்ணப்பட்டு ஒரு சிவிகையிலே விரலை வாயில் வைத்துக்கொண்ட வண்ணமாய், சித்திரித்திருக்கின்றது. கன்ன மீசையினால் அவர் கர்னல் பேலி எனத் தெளிவாகின்றது. அங்கிலேயருக்கெல்லாம் கன்னமீசையுண்டு. டிப்புவோ ஜயசீலனாய் சாந்தமான வடிவத்துடன் கையில் ஒரு ரோஜாமலரை வைத்துக்கொண்டபடி சித்திரிக்கப்பட்டிருக்கிறான். ஒருபுறத்தில் முற்காலத்தும் இக்காலத்துமுள்ள மகம்மதிய வீரர்களின் படங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவ்விடம் முழுதும் இப்போது வெகு நன்றாய்ச் செப்பனிடப்பட்டிருக்கின்றது. அந்தச் சித்திரவர்ணங்களின்மேல் சூரியகாந்தி படும்போது அவை வெகு அலங்காரமாகக் காணப்படுகின்றன. அந்த அலங்காரங்களெல்லாம் தோற்றத்தில் கொஞ்சம் குரூரமானவைகளாயிருந்தாலும் மிகச்சிறந்தவைகளாயும் அனுரூபமானவைகளாயும் இருக்கின்றன.

8. அந்தப் பிரதேசமும் ரோகத்துக்கு இடமாய் வாஸயோக்கியமானதல்ல. அங்கும் காவிரியாற்றிலுள்ள கற்களே நச்சுவாயுவை உண்டாக்குகின்றன என்கிறார்கள். காவிரிநீர் பாய்கின்ற செழிப்பான நெல்வயல்களே காய்ச்சல் உண்டாக்குகின்றனவென நான் எண்ணுகிறேன். டியூக் அவ் வெல்லிங்டன் கம்மிஷனராயிருந்தபோது வாஸம்பண்ணின இடம் அதுதான்.

9. அன்று பகற்பொழுதுக்குமேல் நான் ஸ்ரீரங்கபட்டணத்தை விட்டு மைசூர் நகரத்துக்குப் போனேன். அந்நகரத்துக்கு அருகில் அந்தத் தரைமட்டத்துக்குமேல் 1000 அடி உயரமான சாமுண்டியென்னும் ஒரு குன்றும் அந்தக் குன்றின்மேல் ஒரு காளிகோவிலும் இருக்கக்கண்டேன். அந்தக்காளி அவ்விடத்தில் மஹிஷாசுரனென்னும் எருமைக்கடா வடிவமான ஒரு அசுரனைக் கொன்றதாகவும், அதைப்பற்றிவந்த மஹிஷாசுரபுரமென்னும் பெயரே மைசூரென மருவி வழங்குவதாகவும் சொல்லுகின்றனர். அந்தக் காளியே அநாதியாய் மைசூர் ராஜவம்சத்தார்க்குக் குலதெய்வமாம்.

10. மகாராஜா சியாமராஜேந்திரவுடையார் பகதூர் இப்போது அத்தேசத்தை ஆண்டுவருகிறார். இவ்விளவரசர்க்கு இவருடைய முன்னோர் ஆண்டுவந்த அரசாட்சியை அங்கிலேய துரைத்தனத்தார் இப்போது அவ்வண்ணமே ஒப்புவித்தது இந்துதேசசரித்திரத்தில் ஒரு முக்கியமான செய்தியாம். மேலும் அங்கிலேய துரைத்தனத்தார் சுதேசராஜாக்களிடத்திலும் பிரஜைகளிடத்திலும் தருமபுத்தியும் உதாரகுணமும் உடையவர்களாயிருக்கின்றனர் என்பதற்கு இதுவே அனுபவசித்தமான ஒரு அத்தாட்சியாகும்.

## 13. இன்பமும் துன்பமும்.

1. இவ்வுலகம் உண்டானநாள்முதல் ஒளியும் இருளும் போல் ஒன்றுக்கொன்று அவ்வளவு விரோதப்பட்ட இரண்டு குடும்பங்கள் உண்டு. அவற்றுள் ஒன்றுக்கு இருப்பிடம் சுவர்க்கலோகம்; மற்றொன்றுக்கு இருப்பிடம் நரக

லோகம். சுவர்க்கலோகத்திலிருந்த குடும்பத்தில் கடைசியாய், தேவவமிசத்திற் பிறந்த சற்குணனென்பவனுடைய பவுத்திரியும், சவுக்கியத்தின் புத்திரியுமான இன்பமென்னும் ஒருத்தி இருந்தாள். நரகவாசிகளில் கடைசியாய் இருந்தவன் பெயர் துன்பன்; அவன் துக்கனுக்குப் பிள்ளை; துற்குணனுக்குப்பேரன்; பிசாசங்களுடைய மரபில் உற்பத்தியானவன்.

2. இவ்விரண்டு நிலைமைக்கும் மத்தியிலுள்ளது பூலோகம். அதிலுள்ளவர்களது இயல்பும் மேற்சொல்லிய இருதிறத்தவர்களுக்கும் நடுத்தரமான வியல்பே. அவர்கள் இன்பமென்பவள் இருக்கும் சுவர்க்கத்திலுள்ளவர்கள் போல அவ்வளவு நற்குணமுள்ளவருமல்லர்; துன்பம் இருக்கும் பாதாளத்தாரைப்போல் அவ்வளவு துர்க்குணமுடையவருமல்லர். இவ்விருகுலத்தாருடைய குணங்களாகிய சன்மார்க்கம் துன்மார்க்கம் இரண்டும் செறிந்தவர்களாய்ச் சிலவேளைகளில் நன்மையும் சிலவேளைகளில் தீமையும் புரிபவர்கள். இவர்களுக்கு மானிடரென்று பெயர். இந்த ஜாதியார் தமது நற்குண நற்செயல்களால் துக்கங்களுக்கு ஆளாகாமலும், துர்க்குண துர்ச்செய்கைகளால் சுகத்துக்கு ஆளாகாமலுமிருப்பதைத் தருமதேவன் பார்த்து அவர்களுக்கு நன்மை தீமைகளைப் பகுத்துணரும் அறிவைக் கொடுக்கக் கருதி, மேற்கூறிய சவுக்கியத்தின் புத்திரியாகிய இன்பத்தையும், துக்கத்தின் புத்திரனாகிய துன்பனையும் இருவர்க்கும் சமதூரமான பூலோகத்தில் வந்து ஒருவரையொருவர் சந்திக்கும்படி கட்டளையிட்டருளினார். அதனோடு கூடத் தான் மனிதர்களை அவர்களுக்குப் பாகித்துக்கொடுக்கும் விபாகத்துக்கு அவர்கள் உடன்படும்பக்ஷத்தில் அப்படியே தான் அமைத்துக்கொடுப்பதாகவும் உறுதிமொழி கொடுத்தார்.

3. அத்தேவனுடைய கட்டளைப்படியே இன்பமும் துன்பமும் இப்பூலோகம்வந்து சேர்ந்தவுடனே தங்களுக்கு அளிக்கப்பட்ட பொருள்களுள் அவரவர் குணாதிசயத்துக் கேற்பச் சன்மார்க்கரனைவரையும் இன்பமும் துன்மார்க்கரனைவரையும் துன்பனும் கைக்கொண்டு அனுபவிப்பதாக ஒத்துக்கொண்டார்கள். ஆனாலும் அவர்களுள் இன்னார் இன்னார் தன் தன் பங்குக்குரியரென்று நிச்சயிக்கும்படி ஒவ்வொரு மனுஷனையும் சோதனைபண்ணிப் பார்க்கும்போது ஒவ்வொருவனும் இரண்டு பெயருக்கும் உரியவனாகக் காணப்பட்டனன். எப்படியெனில், அவர்களுடைய சொந்த உலகத்தில் இருந்ததுபோலச் சிறிதளவாவது நன்மையில்லாத அத்தனை துன்மார்க்கனுமிங்கில்லை; சிறிதளவாவது தீமைகலவாத அத்தனை சன்மார்க்கனுமில்லை. கொடியதுஷ்டனிலும் இன்பமென்பவளுடைய பங்குக்குச் சேர்ந்த சற்குணம் நூற்றிலொருபாகமாவது தோற்றியது. சிறந்த சன்மார்க்கனிலும் துன்பன் பாகத்திற்குச் சேர்ந்த துர்க்குணம் மூன்றிலொருபங்குக்காவது வந்தது. ஆதலால் தாமே இதற்கோர் உபாயந்தேடிக் கொள்ளா விடின் தங்களுக்கு எப்போதும் ஓயாத விவாதம் நேரிடுமென்று கண்டார்கள். இப்படி இவர்கள் சங்கடப்பட்டுக்கொண் டிருக்கும்போது தாங்கள் இருவரும் ஒத்து ஒருவரை ஒருவர் மணம்புரிந்துகொண்டாலல்லது தீராதெனத் தீர்மானித்து அவ்வண்ணமே முடித்துக்கொண்டனர். அதனாலேயே இப்போது இன்பமும் துன்பனும் ஒரு நுகத்திற் பூட்டிய எருதுகள்போல என்றும் எவ்விடத்தும் ஒருவரையொருவர் பிரியாமல் வசிக்கின்றார்கள். ஆதலின் இருவரும் ஒருவனிடத்திற்கு ஒன்றாய்க் கூடிவந்தாலும் வருவார்கள்; அப்படி யில்லாவிடி.

னும் ஒருவரையொருவர் விட்டு விலகி நெடுந்தூரம் போவதில்லை. ஒருவனுக்குத் துன்பம் வந்தால் இன்பமும் உடனே வரும்; இன்பம் முதலில் வந்தாலும் துன்பன் நெடுந்தூரத்திலிருக்கின்றனென நினைக்கவேண்டுவதில்லை.

4. இத்தன்மையான விவாகம் அவ்விருவர்க்கும் மிகவும் அனுகூலமானதாகவே இருந்ததானாலும், தருமதேவன் எந்தக் கருத்தைநோக்கி அவர்களை நரகலோகத்திற்கு அனுப்பினரோ அக்கருத்து அதனல் நிறைவேறுவதாகக் காணப்படவில்லை. ஆனதுபற்றி அந்த அசந்தர்ப்பத்தைப் போக்கும்படியான மற்றொரு உபாயம் ஆலோசித்து, அவர்களுடைய சம்மதியின்மேல் தருமதேவன் அதை அப்படியே ஸ்தாபிக்கலானர். அந்த ஏற்பாடாவது: "நீங்கள் இவ்வண்ணம் தனித்தனி ஒவ்வொரு மனிதனையும் ஆட்சிசெய்து அநுபவித்தாலும், அவனவன் மரித்தவுடனே அவனுடைய புண்ணிய பாவங்களிலே எது அதிகப்பட்டதோ அதற்குத் தக்கபடி அவன் ஒருவருடைய சுவாதீனத்திலேயே படியவேண்டியது. பாவம் அதிகரித்தவன் துன்பனுடைய கைச்சீட்டு வாங்கிக்கொண்டு பாதாளத்திற்கேகி அங்குள்ள துக்கன் துன்மார்க்கன் முதலிய நரகவாசிகளுடனே சேரக்கடவன். அப்படியன்றிப் புண்ணியம் அதிகப்பட்டிருப்பானயின் இன்பம் என்பவனுடைய பரிபாலனபத்திரம் பெற்றுச் சுவர்க்கத்திற் சென்று அவ்விடத்திலுள்ள சவுக்கியன் சன்மார்க்கன் முதலிய கடவுளருடனே வசித்திருக்கக்கடவன்" என்று இவ்வாறு ஏற்பாடுசெய்து, அவ்வண்ணமே அவர்கள் சம்மதித்து உடன்படிக்கை செய்துகொள்ளப்பண்ணினர்.

# 14. ஜேம்ஸ் வாட் அல்லது நீராவியின் வல்லமையை முதலில் அறிந்த கதை.



1. ஐரோப்பாகண்டத்தில் ஸ்காத்லாந்து தேசத்தின் மேற்றிசையிலுள்ள க்ரீனக் என்னும் பட்டணத்தில் சாதாரணமான ஒரு வீட்டில் நூற்றுமுப்பது வருஷங்களுக்கு முன் ஒருநாள் மாலைப்பொழுதில் அவ்வீட்டிலுள்ளவர்கள் குளிருக்குச் சாந்தியாய்ச் சாளரத்திரைகளையெல்லாம் நன்றாய்க் கட்டிவிட்டு, தேத்தண்ணீர் காய்ச்சிச் சாப்பிட யத்தனித்தார்கள். அவ்வீட்டில் வயதுமுதிர்ந்த ஒரு ஸ்திரீ அங்குமிங்கும் பரபரப்பாய் ஓடி உண்கலங்களை மேசையின்மீது பரப்பி, ரொட்டிகளைத் துண்டுதுண்டாக்கி வெண்ணெயைத் தடவிவைத்தாள். குளிருக்கு இதமாய் உஷ்ணமுண்டாக்க நெருப்புமூட்டம் போட்டிருந்தது. அந்த இருப்படுப்பில் வெந்நீர்க்கரகம் ஒன்று காய்ந்துகொண்டிருந்தது. தீ கொழுந்து விட்டெரிய, அந்தக் கரகத்திலிருந்த ஜலம் அதிக சூடேறிச் சற்றுத் தளபளவென்று கொதிக்கையில், கரகத்தின் வாயிலிருந்து 'உஸ், உஸ்!' என்று நீராவி புறப்பட்டது. மேற்சொன்ன கிழவி இதையெல்லாம் ஓர் அதிசயமாகப் பாராட்டவில்லை. நெடுநாளாய் இப்படியே நெருப்பு எரிகிறதும் வெந்நீர் கொதிக்கிறதும் ஆவி எழும்புகிறதும் பார்த்திருக்கிறாள்; இனிமேலும் அப்படித்தான் இருக்கப்போகிறது; ஆகையால் புதுமையொன்றும் அதில் அவளுக்குத் தோன்றவில்லை.

2. அந்தக் கிழவி அடுப்பண்டைபோய்க் குனிந்து, கொதிக்கும் வெந்நீரை ஒரு பாத்திரத்தில் இறுத்து வடிகட்டு

கையில், அந்த நெருப்புக்கு எதிரில் அவளுடைய பன்னிரண்டு பிராயமுள்ள ஜேம்ஸ் என்னும் குமாரன் ஒரு தாழ்ந்த பீடத்தின்மீது உட்கார்ந்து முழங்காலின்மேல் முழங்கைகளை ஊன்றி, இரண்டு கைகளால் கன்னத்தைப் பற்றிக்கொண்டு எரிகிற நெருப்பையும், காய்கிற கரகத்தையும், அதினின்று எழும்புகிற நீராவியையும் கருத்தாய் உற்றுப்பார்த்துக்கொண்டு, அதே நினைவாய்ச் சிந்தித்துக் கொண்டு மற்றெல்லாவற்றையும் மறந்திருந்தான். இப்படி அந்தச் சிறுவன் நெருப்பையே பார்த்துக்கொண்டிருக்கையில் தாயானவள் அவன்மீதே கண்ணுயிருந்து, நம்முடைய ஜெம்மியைப்பார்க்கிலும் சோம்பேறிப்பிள்ளை இவ்வுலகத்தில் வேறுண்டோ என்று நினைக்கலானாள். அச்சமயத்தில் அவளுக்குச் சிநேகமான ஒருத்தி அவளைக் காணவர, அவளைப்பார்த்து, எங்கள் ஜெம்மியினுடைய மனப்போக்கைப் பார்! நெருப்பண்டை உட்கார்ந்து கொண்டு வெந்நீர்க்கரகத்தையும் நீராவியையும் இமைகொட்டாமல் விழிபிதுங்கப் பார்த்துக்கொண்டிருக்கிறான். இப்படிப்பட்ட பேய்ப்பிள்ளையை நீ எங்கேயாவது கண்டதுண்டா என்று கூறினாள்.

3. தாயின் கருத்து அப்படி இருந்தாலும், வாஸ்தவத்தில் அந்தப் பையன் பார்த்த பார்வையிலே ஒரு விசேஷமிருந்தது. அவன் மனது அதிக சுறுசுறுப்பாய் அதிலுள்ள நுட்பத்தை உய்த்துணர்ந்துகொண்டிருந்தது. அதன்மூலமாய் அவன் ஏதோ பகட்டான கனவுபோன்ற ஒரு அற்புதத்தைக்கண்டு வியக்கின்றவனாகி, அசைவற்று ஒரேநோக்கமா யிருப்பவன்போலக் காணப்பட்டனன். கரகத்திலிருந்து கிளம்புகிற நீராவி விந்தைவிந்தையாய்ச் சுழன்று வரவர மெல்லியதாகி மேலெழுந்து கனம்குறை



ஜேம்ஸ் வாட் நீராவியின் வல்லமையை முதலில் அறிந்தது.

ந்து மறைந்து போமளவும் அதன்மேலேயே கண்வைத் திருந்தான். சிலவேளைகளில் அந்த ஆவி கூட்டமாய்க் கூடி வலிமைகொண்டு கரகத்தின் மேல்மூடியின் ஒரு புறத்தை மெல்லக் கிளப்புவதையும், அப்பொழுது குப்பு குப்பென்று வெண்ணிறமான ஆவி வெளிப்படுவதையும், உயரக் கிளம்பின மூடி மறுபடி சத்தத்தோடு கரகத்தின் வாயில் படிவதையும் கூடக் கருத்துறப் பார்த்துக்கொண் டிருந்தான். அந்த நீராவிப்புகையில் ஒருவிதமான வல்லமை இருந்தது. அதை அந்தச் சிறுவன் கண்டுகொண்ட மாத்திரத்தில் புதிதான ஒரு எண்ணம் தற்செயலாய் அவன் புத்தியில் பிறந்தது. அதாவது, மனிதன் புத்தி சக்திகளைக்கொண்டு பஞ்சபூதங்களோடு போராடி அவைகளை வசப்படுத்திக் கொள்ளலாகுமென்பதாம்.

4. அவன் பின்னும் அப்படியே கூர்மையாய்ப்பார்த்து, ஒருவரும் கண்டறியாத இந்த நீராவியின் வல்லமையினால் மரக்கலங்கள் சமுத்திரத்தில் காற்றின் உதவியில்லாமலும் பாய்விரிக்காமலும் விரைவாய் இயங்குவதுபோலும், மனிதசஞ்சாரமில்லாத காடுகளிலும் மணல் வெளிகளிலும் வண்டித்தொடர் வேகமாய் ஓடுவதுபோலும் கனவில் காணும் காட்சிபோலக் கண்டறியலானான். இவ்விதமாய் அவன் பகற்கனவு கண்டு களிக்கும்போது தாயானவள் அவனைப் பார்த்து, "ஜெம்மீ! ஜெம்மீ!! தேத்தண்ணீர் குடிக்க வா! நீ இன்னும் இப்படியே நெருப்பை உற்றுப்பார்த்துக்கொண்டிருப்பாயாகில் உன் தலைநோகக் குட்டுவேன்" என்றாள்.

5. அதுகேட்டு அந்தச் சிறுவன் வாயைத்திறவாமல் எழுந்திருந்து அவள் சொன்னபடியே செய்தான். ஜேம்ஸ் வாட் என்பது அவன் பெயர்; பிற்காலத்தில் அவன்

'ஸர் ஜேம்ஸ் வாட்' எனச் சிறப்புப்பெயர் பெற்றனன். நீராவியின் சக்தியை மனிதருக்குப் பலவிதத்தில் உப யோகமாகும்படி முதல்முதல் அறிந்து வழிகாட்டினவ னுகையால், அந்த மஹாபுருஷனுக்குத் துரைத்தனத்தார் 'நைட்' என்னும் பட்டப்பெயருங்கொடுத்து அவனைப் பெருமைப்படுத்தினுர்கள்.

6. நீராவியானது பழமையான இவ்வுலகத்தை இப்போ து புதிய உலகமாக மாற்றியிருக்கின்றது. அது மனித னுக்கு எந்தக்காரியந்தான் செய்யவில்லை? நீராவியந் திரத்தால் ஆகாதகாரியமும் உண்டோ? அது வண்டி தள்ளுகின்றது; படவு ஓட்டுகின்றது; முறுக்கு ஆணி களை அழுத்துகின்றது; சுமைகளை உயர ஏற்றுகின்றது; கீழே இறக்குகின்றது; தூக்குகின்றது; கீழ்நீரை மேலெ ழுப்புகின்றது; நீரை வற்றச்செய்கின்றது; நீர்ப்பாய்ச்சு கின்றது; இழுக்கின்றது; வலிக்கின்றது; ஒட்டுகின்றது; கற்களைப் பிளக்கின்றது; குழி தோண்டுகின்றது; மாவ ரைக்கின்றது; முத்திரை போடுகின்றது; ரந்திரம் செய் கின்றது; தூற்றுகின்றது; தாள்போடுகின்றது; இறுக்கு கின்றது; பொறுக்குகின்றது; வெட்டுகின்றது; அறுக் கின்றது; இழைக்கின்றது; துளைக்கின்றது; துருவுகின் றது; துருத்தியூதுகின்றது; உலைக்களத்தில் இரும்புகளைக் காயச்சுகின்றது; சம்மட்டியடிக்கின்றது; அராவுகின் றது; மெருகு கொடுக்கின்றது; ஆப்புக் கடாவுகின்றது, பன்னுகின்றது; நூற்கின்றது; சுற்றுகின்றது; நெய்கின் றது; நாணயங்கள் செய்கின்றது; அச்சிடுகின்றது. இவ் வண்ணம் நாம் அளவிடக்கூடாத இன்னும் எத்தனையோ காரியங்களைச் செய்கின்றது. சாஸ்திர விஷயங்களுக்கு வெற்றிக்கொடியான இப்படிப்பட்ட நீராவியின் சக்தி

ஒருகாலத்தில் பலர் ஏளனம் செய்யத்தக்கதாயிருந்தது; ஒருகால் ஒரு சிறுவன் அடுப்புக்கெதிரில் உட்கார்ந்து, யாவரும் சோம்பேறியென்று எண்ணும்படி, தேயிலேக் கரகத்தினின்று நூலிழைபோலக் கிளம்பும் நீராவியை உற்றுப்பார்த்துக்கொண் டிருந்தபோது, அவனுடைய மனதில் திடீரென்று உதித்த ஒரு மனத்தோற்றமாயிருந் தது.

7. பதார்த்த விஞ்ஞான சாஸ்திரமென்பது இன்னும் இளமைப் பருவத்திலிருந்தாலும் இப்போதே மனிதனுக் கு மேற்சொல்லிய பெரியகாரியங்களேச் செய்கின்றதென் ருல், இது மேன்மேலும் என்னென்ன அற்புதங்களேச் செய்யமாட்டாது! அதிமேதாவிகளான சாஸ்திரபண்டி தர்கள் பூர்வகாலத்தில் தோன்றினதுபோல் இனிமேலும் தோன்றி, இந்தச் சாஸ்திரத்தைப் பின்னும் விசேஷமாக விருத்திசெய்வார்கள்.

8. இவ்விதமாய் இங்கிலாந்துதேசம் சாஸ்திரஞானத்தி லும் சிற்பவேலேயிலும் மேன்மைபெற்றிருக்கின்றது. இதி லும் மேன்மையானது மற்ருென்றுண்டு. அதாவது, அத்தேசம் தெய்வபக்தியிலும் நீதிநெறியிலும் தலேமைத் தன்மை பெற்றிருப்பதேயாம். தனக்கிருக்கும் பலத்தை யும் செல்வத்தையும் உண்மைக்குத்தாரமாய்ப் பயன் படுத்தி வருகின்றதிஞலேதான் தேவானுக்கிரஹம் பெற் று, சமீபத்திலும் தூரத்திலுமுள்ள பலதேசங்கள் சத்து ருபயமில்லாமல் தம்தம் சுகத்தையும், விருத்தியையும், சுவாதீனத்தையும் மேற்படி தேசத்தினுதவியால் அடை யலாமென்று எதிர்பார்க்கும்படியான செல்வாக்குடைய தாக விளங்குகின்றது.

மேற்சொன்ன விருத்தாந்தம் கட்டுக்கதையல்ல, ஜேம்ஸ் வாட் என்பவன் 1736-ஸில் ஜநித்தவன். அவனுக்குப் பன்னிரண்டாவது வயதில் இந்த நீராவியைப் பற்றிய விருத்தாந்தம் நடந்தது. அவன் மேற்சொன்னபடி ஸ்காத்லாந்தில் க்ரீனுக்குப் பட்டணத்திலிருந்த ஒரு அற்பவியாபாரியின் மகன். அவன் அசைப்புத்தகமும் கிறிஸ்துவேத புத்தகமும் தவிர வேறு புத்தகங்களைப் படித்தவனல்லன்; ஆயினும் நுட்பபுத்தியும் பேரறிவும் ஒரே தேசத்துக்காவது ஒரே காலத்துக்காவது உரியனவல்லவே. எந்தத்தேசத்திலும் காலநியதியில்லாமல் அவை தோன்றலாமல்லவா? பூர்வத்தில் இந்துதேசத்திலே காளிதாஸனும் க்ரீக்தேசத்தில் ஹோமரும் மஹாகவிகளாய்த் தோன்றியிருந்தனர். அப்படியே இங்கிலாந்து தேசத்தில் பிற்காலத்திலே ஷேக்ஸ்பியர், மில்டன் என்னும் கவிராஜர்கள் தோன்றினர். அஜீனுவில் ப்லாடோ பிறந்தானென்றால், அதற்கேற்க பிருத்தானியாவில் பேகன் பிறந்தனன். அலெக்ஜாந்திரியாவில் முற்காலத்தில் ஒரு மஹாவீரன் உண்டாகிப் பல வெற்றிகளைப் பெற்றானென்று சிறப்பித்தால், ஸ்காத்லாந்தில் ஜேம்ஸ் வாட் என்னும் மேதாவிதோன்றி உலகத்தைப் புதிய உலகமாக மாற்றினனென மகிழ்ந்து பேசலாம்.

## 15. ஞானத்தை ஏற்றபடி உபயோகித்தல்.

1. நமக்கு உள்ள சக்திகளை நாம் எப்படி உபயோகிக்கிறோமோ, அதற்குத் தக்கபடியே நமக்குச் சிறப்பு உண்டாகும். தனக்குக் கிடைத்த புத்திசாமார்த்தியம் சொற்பமாயினும் அதை ஒருவன் சரியாகப் பிரயோகிப்பானாைல்

மிகுந்த புத்திசாமார்த்தியமுள்ளவனைப்போல் அவ்வளவு பெருமை பெறுவதற்கு உரியவனாவான். திரண்ட ஸ்திதி ஒருவனுக்குப் பிதிரார்ச்சிதமாய்க் கிடைத்தால் அதில் எப்படி அவனுக்கு ஒரு மேன்மையுமில்லையோ, அப்படியே சிறந்த புத்திசாமார்த்தியங்கள் இயற்கையாய் அமைந்திருப்பதிலும் ஒரு மேன்மையுமில்லை. அந்தப் புத்திசாமார்த்தியங்களை உபயோகிக்கிற விதத்தையும், அந்த ஸ்திதியைப் பண்படுத்துகிற விதத்தையும் பார்த்துத்தான் அவற்றின் மேன்மையை அறியவேண்டும். ஒரு உபயோகமுமின்றிக் கல்வியாகிய பெருஞ்செல்வத்தை மனது விசேஷமாய்த் தேடிவைத்துக்கொண்டிருப்பது கூடுமானதுதான்; அவ்வறிவு, நன்மைக்கும் விவேகத்திற்கும் துணையாகி நல்லொழுக்கத்திற் புகாதிருக்குமாயின், இருந்தும் இல்லாததுபோலவே. "ஸமஸ்தமான அறிவும் முறைமையாய்ப் பயின்ற மனது என்னும் நிலத்தில் நன்றாக வேரூன்றி அதன் சாரத்தை உண்டு வளரும்படி செய்யவேண்டும். மற்றப்படி மனதைப் பண்படுத்துவது அதற்கு நாசமாகவே முடியும்" எனப் பெஸ்தலோசி வற்புறுத்திக்கூறினார். அறிவானது இவ்வுலகில் வழங்கும் அற்பமான அக்கிரமங்களுக்கு உடன்படவொட்டாமல் ஒருவனை விலக்கிக் காக்குமென்றாலும், உண்மையான நீதியொழுக்கம் முதலியவைகளால் பத்திரமாய்ப் போஷிக்கப்பட்டாலன்றி, சுயப்பிரயோஜனமான துர்மார்க்கங்களினின்றும் விலக்கிக் காக்கமாட்டாது. ஆனதுபற்றியே கல்வியில் நன்றாய்த் தெளிந்தும் ஒழுக்கத்தில் மிகவும் குறைவுள்ளவர்களாயும், பாடசாலைப்படிப்பு மிகுதியாயிருந்தாலும் உலகநெறி சிறிதுமறியாதவர்களாயும், நாம் பார்த்து அனுசரிக்கத்தக்க நல்லொழுக்கமுள்ளவர்களாயிருக்கவேண்டுவது போக நாம் கண்டு அஞ்சி விலகியிருக்கவேண்டிய தீய

வொழுக்கமுள்ளவர்களாயும் அங்கங்கே கற்றறிமோழை கள் அநேகரைக் காண்கிறோம். "புத்திமான் பலவான்" என்று ஒரு பழமொழி வழங்குகிற தென்றாலும், அதைப் போலவே மதாவேசமும், கொடுங்கோன்மையும், பேராசையும் வலியனவாயிருக்கின்றன. ஆதலின் அந்தப் புத்தியை நல்வழியிற் கொண்டு திருப்பாவிட்டால் அது தீயோர்களைப் பின்னும் கொடியவர்களாக்கிவிடும். மேலும் அதை ஒரு பெரிய நன்மையாகக் கொண்டாடுகிற கூட்டத்தாரைப் பிசாசுகளின் கூட்டம்போல் ஆக்கிவிடும்.

2. இக்காலத்திய கல்விப்பயிற்சியின் மேம்பாட்டை நாம் மிகவும் பெருமைப்படுத்திப் பேசலாம்; மேலும் புத்தகசாலைகளும், தர்மசாஸ்திரங்களும், விநோதப்பொருட் காட்சிச் சாலைகளும் அநேகம் இருப்பதனால் அவற்றைக் கொண்டு நாம் கல்வியில் விசேஷமாய் விருத்தியடைகிறோமென்றும் நினைக்கக்கூடும். ஆயினும் இவ்வகையான சாதனங்கள் அவனவன் உயர்ந்த கல்வித்துறைகளில் தன்னைத்தான் பண்படுத்திக்கொள்வதற்குத் துணையாயிருப்பதுபோலவே பெரும்பாலும் அதற்கு இடையூறாகவும் முடியும். பொருளுள்ளவர்களெல்லாரும் எப்படிப் பெருங்கொடையுள்ளவர்களாவதில்லையோ அப்படியே, விசேஷமாய்ப் புத்தகங்களைக் கையாள்பவர்களும் வித்வான்களாக மாட்டார்கள். நம்மிடத்தில் மிகுதியாய்ச் சௌக்கியத்துக்கு வேண்டிய சாதனங்களுளவென்றாலும், ஊன்றிப் பார்த்தால், நிதானம், விடாமுயற்சி, உழைப்பு முதலாகிய பழைய வழியைப்பிடித்துச் சென்றாலல்லது அறிவும் விவேகமும் ஒருபோதும் நமக்குச் சுவாதீனமாகமாட்டா. கல்விக்கு வேண்டிய கருவிகளைமட்டும் கையாள்வது வேறு; படிப்பைப்பார்க்கிலும் பெறுமைபெற்றதான சி

கையால் அடையத்தக்க அறிவும் விவேகமும் வேறு. படிப்பாவது, பெரும்பாலும் பிறருடைய கருத்துக்களைக் கேட்டுத் தெரிந்துகொள்வதேயொழிய வேறல்ல. ஏனெனின், ஒன்றைப் படிக்கும்போது படிப்பவன் புத்தி புதிதாய் ஒரு வேலையும் செய்வதில்லை. ஆதலால் நமது படிப்பு, சிறிதளவேனும் மனதைத் திருத்தித் தெளிவிக்காமலும், ஒழுக்கத்தை உறுதிசெய்யாமலும், கணப்பொழுது இதமாய் உள்ளக்கிளர்ச்சி தரும் ஒருவிதமான மதுபானஞ் செய்வதுபோலாகின்றது. இவ்வாறே அநேகர், வீணாய்ப் பொழுதுபோக்கும் இழுக்கானவேலை செய்துவருங்காலத்தில், தங்கள் மனதைப் பண்படுத்துகிறோமென்று சொல்லிப் பாசாங்குசெய்து திரிகிறார்கள். ஆயினும் அதினும் இழிதொழில் செய்யப்புகாமல் அந்தமட்டிலாவது அவர்களைக் காக்கிறதேயென்று அந்தப் பொழுதுகொல்லும் வேலையைப்பார்த்தும் நாம் சந்தோஷிக்க வேண்டுவது தான்.

3. மேலும் புத்தகங்களைப் படித்துவரும் அறிவு வெகுவாய் விலைபெற்றதாயிருந்தாலும் புத்தகப்படிப்பாகவே முடிகின்றது ; அனுபவத்தால் வரும் அறிவோ விவேகமாக முடிகின்றது. ஏட்டுக்கல்வி அளவற்றிருப்பதும் சரி, அனுபவம் சிறிதளவு இருப்பதும் சரி. ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு உதவாதல்லவா ? " நம்மை நேராகவாவது ப்ரம்பரையாகவாவது யோக்கியர்களாயும் உபகாரிகளாயும் எவ்விதத்திலும் செய்யமாட்டாத படிப்பு எவ்விதமான படிப்பானலும் அவையாவும் அயலார் பிரமிக்கத்தக்க ஒருவகை விசித்திரமான சோம்பலேயன்றி வேறல்ல. அவ்விதமாக நாம் சம்பாதிக்கின்ற அறிவும் யாவரும் அங்கீகரிக்கத்தக்கதான அறியாமையேயன்றி மற்றொன்றுமல்

ல" என்று பாலிங்பிரோக் என்பவர் மொழிந்தது வாஸ்தவமேயாம்.

4. ஆதலால், அறிவுவேண்டுவது அவசியமென்றாலும், ஒருவன் விசேஷமாயறிவதே முக்கியமன்று; அவ்வறிவின் நோக்கமும் பிரயோஜனமுமே முக்கியமாம். விவேகத்தை விருத்திபண்ணி, ஒழுக்கத்தைச் சீர்ப்படுத்தி, நம்மை முன்னினும் மிக்க யோக்கியர்களாயும், சௌக்கியமுள்ளவர்களாயும், பிறருக்கு உபயோகமானவர்களாயும், ஈவிரக்கமுள்ளவர்களாயும், விசேஷ சாமார்த்தியமும் உலகத்தில் எவ்வகைச் சிறந்த காரியத்தையும் விடாமுயற்சியாய்ச் செய்து முடிக்கவேண்டுமென்கிற ஊக்கமும் உள்ளவர்களாயும் ஆக்குவதே அறிவின் நோக்கமாயிருக்கவேண்டும். ஆதலின் பிறர் நடந்த நடக்கைகளையும், பிறர் செய்த செய்கைகளையும் பார்த்துப் படித்து அவற்றைச் சிந்தித்துக்கொண்டிருப்பதோடு திருப்தியடைவது போதாது; நாமும் அவ்வண்ணமே நடந்து அத்தன்மையான செய்கைகளைச் செய்துவரவேண்டும்.

---

## 16. சிந்துபாத்து செய்த கப்பல்யாத்திரை.



1. சிந்துபாத்து செய்த கப்பல்யாத்திரையைப்பற்றி முன்னொருபாடத்தில் சொன்னோம்; அவன் மூன்றாந்தடவை கப்பல்யாத்திரை செய்தபோது நடந்த ஸாகஸச்செயல்களை இங்கெடுத்துக் கூறுவோம். சிறுவர்களே, அவன் தன் கதையைத் தானே சொல்வதாகப் பாவித்துக்கொள்ளுங்கள். அவன் முன்சொல்லியவாறே வயது தளர்ந்து தாடி நரைத்த பெரியமனிதனென்பதும், போஜனம்செய்

து விட்டுத் தன் தோழர்களனைவரும் சூழ்ந்திருக்க மத்தியிலுட்கார்ந்து, அங்கங்கே தான் கண்ட புதுமைகளையும், தான் தப்பிவந்த அபாயங்களையும் எடுத்துச் சொல்லிக் கொண்டிருப்பவனென்பதும் உங்களுக்குத் தெரியுமல்லவா? அவன் சொன்னதாவது:—

2. என் சிநேகிதர்களே, முதல் இரண்டு தடவைகளிலும் எவ்வளவோ கஷ்டநஷ்டங்கள் அனுபவித்திருக்க, மறுபடியும் மூன்றுந்தரம் நான் யாத்திரைசெய்யத் துணிந்ததைக்கேட்டால் உங்களுக்கே ஆச்சரியமாயிருக்கும். அப்படியிருந்தும் புதிதுபுதிதாய்த் தேசங்களைப் பார்க்கவேண்டுமென்றும், வியாபாரஞ்செய்து மேன்மேலும் மிகுதியாய்ப் பொருள்தேடவேண்டுமென்றும் நான் கொண்ட ஆவல்மட்டும் அடங்காமலே இருந்தது. அதனால் வேண்டிய சரக்குகளைச் சித்தம் செய்துகொண்டு இன்னும் அநேகம் வர்த்தகர்களோடு கூடப் பஸ்ஸோரா நகரத்தில் கப்பலேறிப் புறப்பட்டேன். கடலில் சிறிதுதூரம் போனவுடனே பெரும்புசலொன்று அடிக்க ஆரம்பித்தது. வெகுநாள் வரையில் அந்தப் புசல் ஓயாமல், நாங்கள் இருக்குமிடம் இன்னதென்றுகூடத் தெரியாதபடி, கப்பல் ஏதோ ஒரு மூலைக்கு அடித்துக்கொண்டுபோய், அங்கே ஒரு தேசத்தின் கரையில் மோதிச் சுக்கல்சுக்கலாய் உடைத்துவிட்டது. நாங்கள்மட்டும் உயிரோடு தப்பினோம்; சாமானெல்லாம் சேதமாய்ப்போயின.

3. கப்பல் உடைந்துபோகவே நாங்களெல்லோரும் அந்தத் தீவில் இறங்கி அதனுள் சிறிதுதூரம் சென்றோம். அங்கே சிறந்த பெரிய மாளிகையொன்று தென்பட்டது. கிட்டப் போய்ப் பார்க்கையில் பெரிய சந்தனக்கதவுகள் நாட்டி அது வெகு அழகாயிருந்தது. நாங்கள் போய்த்

தொட்டவுடனே அந்தக் கதவு திறந்து போயிற்று. உள்ளே நுழைந்தோம்; அங்கே பெரிய கூடமொன்றிருந்தது. அதைப் பார்த்தால் அடுப்புந் துடுப்புமாய்ச் சமையலிடம் போலத் தோன்றியது. அங்கே ஒரு மூலையில் மலைபோல மனிதர்களுடைய எலும்புகள் குவித்துக்கிடந்தன. அதைப்பார்க்க எங்களுக்குப் பெருந்திகில் உண்டாயிற்று.

4. அந்த எலும்புகளைப்பார்த்து நாங்கள் பிரமித்துக்கொண்டு நிற்கையில், உட்புறத்து அறைக்கதவு திடீரென்று திறக்கப்பட்டது. உடனே ஒரு பெரிய விருக்ஷம் போல் ஆகாயத்திற்கும் பூமிக்குமாய் உயர்ந்து, கன்னங்கறேலென்று மிகவும் பயங்கரமான ஒரு மனிதன் வெளிப்பட்டான். அவன் நடு நெற்றியில் நெருப்புத் தழல்போலப் பளபளவென்று எரிந்து கொண்டிருக்கிற ஒரே ஒரு கண்ணும், மிகக் கூர்மையாய் நீண்டு வெளியே புறப்பட்டு நிற்கின்ற கோரப்பல்லும், மார்பில் தொங்கி விழுகின்ற கீழுதடும், முறம்போல் அகன்ற யானைக் காதுகளும், மிகப் பெரிதான பறவையின் நகங்கள்போல நீண்டு வளைந்த நகங்களுமுள்ளவனுயிருந்தான். அந்தப் பயங்கரமான ராக்ஷதனைக் கண்டவுடனே நாங்கள் ஒன்றும் தோன்றாமல் சிறிதுநேரம் அசைவற்றுப் பிரமித்துநின்றோம். உடனே அந்த ராக்ஷதன் எங்கள்மேல் பாய்ந்து, கசாப்புக்கடைக்காரன் ஆடுகளைப் பரீக்ஷைபார்ப்பதுபோல் எங்களைப் பரீக்ஷைபார்த்து எங்களுடைய கப்பல்தலைவன் மிகவும் கொழுப்புள்ளவனென்று கண்டு, ஒரு கையால் அவன் கழுத்தைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு மற்றொருகையால் அவனைக் குத்திக்கொன்றான். பிறகு அங்கே பெரிதாய்த் தீமூட்டி அதில் அவ்வுடலைப் பசனம்பண்ணி அதை மற்றொரு அறைக்குள் கொண்டுபோய்த் தின்று உட

னே தூங்கிவிட்டான். சிறிது நேரத்துக்கெல்லாம் மிகவும் பயங்கரமான இடிபோன்ற குறட்டைகேட்டது. அன்றிரவெல்லாம் அவன் அங்கேயே படுத்திருந்து, பொழுது விடிந்ததும் எங்களை அம்மாளிகையிலேயே விட்டுவிட்டு வெளியே போயினன்.

5. அவன் அங்கிருந்து சிறிதுதூரம் போயிருப்பானென்று எங்களுக்குத் தோன்றியவுடனே, அம்மாளிகையின் பெரிய கருங்காலிக்கதவைத்திறந்துகொண்டு அவ்வழியாய் ஏதாவது கப்பல் வந்தால் அதில் ஏறிக்கொண்டு போய்விடலாமென்று கடற்கரைக்குப் போனேம். போகும்போது நாங்கள் வழியிலே மரங்களினின்றும் அநேகம் பழங்கள் பறித்துத்தின்றேம். பொழுதுபோகிற தருணத்தில் அவ்வரக்கன் எங்கிருந்தோ ஓடிவந்து, இடையன் ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டுபோவதுபோல எங்களைத் தன் கைகளை நீட்டி அதட்டி அரண்மனைக்கு ஓட்டிக்கொண்டு போயினன். அன்றிரவிலும் எங்களுள் மற்றொருவனைப் புசித்துப் படுத்திருந்து மறுநாள் காலையில் முன்போலவே அவன் எழுந்துபோய்விட்டான். போனபின்பு நான் என் தோழர்களை நோக்கி, இதென்ன, நாம் இப்படி இந்த ராக்ஷதனுக்குத் தினமொருவராய் இரையாய்ப்போகிறேமே! இப்படி இரையாவதைப்பார்க்கிலும், நம் உயிரைக் காத்துக்கொள்வதற்கு ஏற்றதாய் ஏதாவது ஒரு உபாயஞ் செய்து, அப்போது அதனல் ஒருவேளை இறந்துபோனலும் அது நலமல்லவா என, அவர்களும் அதற்குச் சம்மதித்தார்கள்.

6. அப்படியே நாங்களெல்லாரும் ஒரு ஏற்பாடுசெய்துகொண்டு, அன்றிரவில் அவ்வரக்கன் வந்து மற்றொருவனைத் தின்றுவிட்டுத் தூங்குகிற தருணத்தில், இரண்டு இ

ருப்புச்சலாகைகளை நன்றாய்ப் பழுக்கக்காய்ச்சி, நானும் மற்றொருவனுமாக மெல்லக் கொண்டுபோய்த் தலையணை யண்டை பக்கத்துக்கு ஒருவராக நின்று அவனுடைய ஒற்றைக்கண்ணில் அழுந்தச் சொருகிவிட்டோம். அந்த நோய் பொறுக்கமாட்டாமல் அவ்வரக்கன் பயங்கரமாகக் கூச்சலிட்டுக்கொண்டு எழுந்து கையைநீட்டி எங்களைப் பிடித்துக்கொள்ளப்பார்த்தான்; அவனுக்குக் கண் தெரி யவில்லை. நாங்கள் அவன் கையில் அகப்படாமல் அப்பு றம் ஒதுங்கிப்போய்விட்டோம். பிறகு இதுதான் தருண மென்று நாங்கள் சீக்கிரமாய்க் கடற்கரைக்குச்சென்று அங்கே சிதறிக்கிடந்த எங்கள் மரக்கலக் கட்டைகளை ஒன் றாய்ச் சேர்த்துச் சில சிறு படவுகளாகக் கட்டி அவற்றில் ஏறிக்கொண்டு அவ்விடம்விட்டுப் புறப்பட்டோம்.

7. அவ்விரவுமுழுதும் ராக்ஷதனுடைய இரைச்சல் ப யங்கரமாய்க் கேட்டுக்கொண்டேயிருந்தது. மறுநாள் காலையில் அந்த ராக்ஷதன் இன்னும் பல ராக்ஷதர்களோடு கூடக் கடற்கரைக்கு ஓடிவரக்கண்டோம். அவர்கள் கடலி லேகூடச் சிறிது தூரம் இறங்கிவந்து பெருங்கற்களை எடுத்து எங்கள்மேல் எறிந்தார்கள். நானும் இன்னும் இரண்டுபேரும் ஏறிவந்த படவுதவிர மற்றவையாவும் அந்தக் கற்கள் வீழ்ந்து அமிழ்ந்துபோயின. நாங்கள்மாத் திரம் கப்பற்பாய்போல ஒரு துணியை விரித்துக்கட்ட, காற்றும் வாட்டமாய் வீசவே கரையினின்றும் வெகு தூரம் ஒதுங்கிவந்துவிட்டோம்.

8. என் நேசர்களே! மறுநாள் காலையில் தெய்வகடா க்ஷத்தால் அந்த வழியாய்க் கப்பலொன்று வரவே, அவ் வரக்கனுக்கு இரையாய்ப் போகாமல், அதிலேறிக்கொண் டு பத்திரமாய் இவ்விடம் வந்து சேர்ந்து, இப்போது இவ்

வளவு சந்தோஷமாய் உங்களுக்கு இக்கதைகளைச் சொல்லும்படியானேன் பாருங்கள் என்றான்.

---

## 17. பொருளாசையும் பெரும்போகமும்.



1. முற்காலத்தில் மிக்கவல்லவர்களான இரண்டு கொடியர்கள் இருந்தனர். அவர்களுள் ஒருவனுக்குப் பெரும் போகம் என்று பெயர்; மற்றொருவனுக்குப் பொருளாசையென்று பெயர். இவ்விருவரும் ஓயாமல் ஒருவரோடொருவர் போராடிக்கொண்டேயிருந்தனர். மன்னுயிர்களுடைய மனதுகளை முழுதுந் தாமே கவர்ந்துகொண்டு ஏகசக்ராதிபதியாய் ஆளவேண்டுமென்று அவர்களுள் ஒவ்வொருவரும் கருத்துக்கொண்டிருந்தனர். பெரும் போகராஜன் கீழ் மகிழ்ச்சி, பெருமை, பிரசித்தி, டம்பம், சுகம்முதலிய குணங்களாகிய பல சேனைத்தலைவர் இருந்தனர். இவர்களெல்லாம் தம்மால் கூடியவளவு வஞ்சனையில்லாமல் தம்மரசனுக்கு உதவிசெய்து வந்தார்கள். பொருளாசைராஜனும் துணைவலிமையில் பெரும்போக ராஜனுக்குக் குறைந்தவனல்லன். அவனிடத்திலும் பசி, உழைப்பு, கவலை, ஜாக்கிரதைமுதலிய குணங்களாகிய பல போர்வீரர்கள் சோர்வின்றி ஊழியஞ் செய்துவந்தார்கள். இவர்களோடுகூட அவனிடத்தில் பிரதானமந்திரியொருவன் இருந்தான். அவன் எப்போதும் அரசன் அண்டையிலேயேயிருந்து ஏதாவதொன்று அவன் காதில் உபதேசித்துக்கொண்டேயிருப்பான். அந்த மந்திரிக்கு லோபன் அல்லது அழுக்கனென்று பெயர். இவ்வண்ணம் பொருளாசை லோபனுடைய ஆலோசனைகளைக் கேட்டு

நடந்துவந்தபடியே, அவனுடைய எதிரியான பெரும்போகராஜனும் பிரதான மந்திரியும் ராஜகாரிய நிர்வாகியுமான வீண்செலவுக்காரனென்பவனுடைய சட்டதிட்டங்களுக்கு வழிப்பட்டு நடந்துவந்தான். அம்மந்திரி அரசனுக்கு வேண்டிய எல்லாக்காரியங்களையும் சீர்ப்படுத்திக்கொண்டு நிமிஷங்கூட அரசனைவிட்டு பிரியாமலிருந்தான். இவ்விரண்டு பெரும் பகையாளிகளும் நாடுபிடிக்கும்பொருட்டு இவ்வாறு போராடி வருகையில், ஒவ்வொருவரும் பற்பல விதமாக வெற்றிகொண்டார்கள். ஒரு மனதைப் பொருளாசைராஜன் பிடித்துக்கொள்வான், ஒரு மனதைப் பெரும்போகராஜன் பிடித்துக்கொள்வான்; ஒரு வீட்டிலேயே தந்தை பொருளாசையின் கொடிக்கீழ்ச் சேர்வான், மகன் பெரும்போகனுடைய கொடிக்கீழ்ச் சேர்வான்; அப்படியே கணவன் ஒருபக்கத்திற் சேர்வான், மனைவி மற்றொரு பக்கத்திற் சேர்வாள். இதுமாத்திரமேயல்ல, ஒரேமனிதன் தன் வயதுநாளில் ஒருபக்கத்தைச் சேர்ந்திருப்பான், விருத்தாப்பியத்தில் மற்றொருபக்கத்தைச் சேர்ந்துபோவான். ஆயினும் விவேகிகள் இவ்விரண்டில் ஒரு புறத்திலும் சாராமல் தனித்து நிற்பார்கள். ஐயோ, நமது துர்ப்பாக்கியத்தால் அப்படிப்பட்ட மகா புருஷர்கள் இவ்வுலகில் இப்போது விசேஷித்திருக்கவில்லையே!

2. இவ்விரண்டு அரசர்களும் இவ்வாறு வெகுநாள் யுத்தஞ் செய்து ஓய்ந்துபோனதினால், கடைசியில் இருவரும் சந்தித்துச் சமாதானமாய்ப் போம்படி உடன்பட்டார்கள். சந்தித்துப் பேசுகிறகாலத்தில் அவர்களுடைய மந்திரிமார்கள்மட்டும் அங்கு வரக்கூடாதென்று ஏற்பாடாயிற்று. அந்த ஏற்பாட்டின்படியே அவ்விரண்டு அரசரும் வந்து கூடினார்கள். முதலில் பெரும்போகராஜன் பேசத்தொ

டங்கினுன். அவன், அதுவரையில் தாங்களிருவரும் புரிந்துவந்த போர்த்தொழில்களையும், அதனுல் உண்டான பலவித லாபநஷ்டங்களையும் எடுத்துக்காட்டிக் கடைசியில் தன் எதிரியைப்பார்த்து ; ஐயா, பேராசை மகாராஜனே! உமது முதல்மந்திரியான லோபனுடைய துர்ப்போதனை உமக்கு இராவிட்டால் நாமிருவரும் எப்போதும் இணைபிரியாத நேசர்களாகவே இருக்கலாம். குடியைக் கெடுக்கக் கோடாலியாய் ஏற்பட்ட அந்த மாபாவியன்ருே ஓயாமல் உமது காதில் உபதேசஞ்செய்து உமது நன் மனதைத் தீதாக்கிவிட்டான் என்றிப்படிப் பலவாய்த் தன் இயற்கைப்படியே சிறிதும் கபடமற்றுப் பேசினுன். அதற்குப்பொருளாசை சொன்னதாவது : பெரும்போகரே! நீர் என்னவோ லோபன் மிகக்கொடியன் என்கிறீர். உம்மிடத்தில் பிரதானமந்திரியாயிருந்து உமது மனதைக் கலைக்கின்ற வீண்விரயக்காரனைப்போல் உலகத்திற்கு நாசனுயிருப்பவன் வேருெருவனுமில்லை ; பிற்காலத்தில் வருந்தும்படி நேருமே என்கிற எண்ணத்தை ஒருவர்க்காவது சிறிதுமுண்டாக்காமல், எப்போதும் இன்பமும் சந்தோஷமும் உண்டாக்குவதிலேயே கருத்துடையவனுய், என் ராஜாங்கத்துக்கு அடிப்படையான நியாயங்களையும் விதிகளையும் விலக்கி, என் அரசாட்சிக்கு வேர்ப்புழுவாயிருக்கிருன். ஆதலால் அவனைவிடக் காலாந்தகன் வேருெருவன் உண்டோ என்ருன்.

3. இப்படி ஒருவர்க்கொருவர் சொல்லிய வார்த்தைகளைக்கேட்டு இருவரும் சிறிதுநேரம் தீர ஆலோசித்துக்கடைசியில், தாங்கள் இருவரும் நேசர்களாவதற்குத் தங்கள் அமைச்சர்களே இடையூறென்று நன்ருய்த் தெரிந்துகொண்டு, உடனே தம்தம் அமைச்சரைத் தள்ளிவிட

வேண்டு மென்று ஏற்பாடுசெய்துகொண்டார்கள். அதன்படியே அவ்விருவரும் அந்தக்ஷணமே அதிகாரத்தினின்றும் தள்ளப்பட்டனர். அந்த ராஜாக்களின் பகைமைக்கு முதற்காரணமாயிருந்த அவ்விருவரும் நீங்கிப்போகவே, அவ்வரசாட்சிகளிலிருந்த மற்ற வேறுபாடுகளெல்லாம் உடனே ஒருமைப்பட்டு போயின. அதன்பிறகு பொருளாசையும் பெரும்போகனும் சிநேகக் கட்டுப்பாடு செய்துகொண்டு, இனிமேல் தாங்கள் இருவரும் சிறிதும் பேதமில்லாமல் வாழவேண்டுமென்றும், யார் எவ்வளவு வெற்றிபெற்றாலும் எல்லாவற்றையும் இருவரும் சரிபாதியாகப் பாகித்துக்கொள்ளவேண்டுமென்றும் உடன்படிக்கை செய்துகொண்டார்கள். இதனாலேதான் இக்காலத்தில் பொருளாசையும் பெரும்போகமுமாகிய இரண்டும் ஒரேமனிதனை சுவாதீனஞ் செய்துகொண்டு ஒரேமனதில் ஒன்றாய்க் கூடிக் குடிகொண்டிருக்கக் காண்கிறோம். அவ்விரண்டு அமைச்சர்களும் நீக்கப்பட்ட நாள்முதல், வீண்விரயக்காரனுக்குப் பதிலாகப் பொருளாசை பெரும்போகனுக்குத் துணையாகவும், லோபனுக்குப் பதிலாகப் பெரும்போகன் பொருளாசைக்குத் துணையாகவுமிருந்து காரியங்களை நடத்திவருகிறார்கள்.



# நீ தி நெ றி வி ள க் க ம்.

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை. 1

எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகும்—உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை யின்றெனி னென்னு மஃதுண்டேல்
பொன்மலர் நாற்ற முடைத்து. 2

வருந்தித்தாங் கற்றன வோம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல்—கருந்தனம்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல். 3

கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோ ரணிகலம் வேண்டாவாம்—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார். 4

முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉம்
கற்றன மென்று களியற்க—சிற்றுளியால்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால். 5

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க—தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றவெல்லாம்
எற்றே யிவர்க்குநா மென்று. 6

கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படும்—இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றாமும்
தலைவணங்கித் தாழப் பெறின். 7

ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணி னனிதாழ்ப—தூக்கின்
மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலைக்கு. 8

தன்னை வியப்பிப்பான் றற்புகழ்த றீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம். 9

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவா னியாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல். 10

கற்பன வூழற்றார் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றாத்தைவா யங்காத்தல்—மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல். 11

கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறாஉம்
குற்றந் தமதே பிறிதன்று—முற்றுணர்ந்தும்
தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன். 12

கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே யாயினும்—தண்ணளியால்
மன்பதை யோம்பாதார்க் கென்னும் வயப்படைமற்
றென்பயக்கு மாணல் லவர்க்கு. 13

குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்றா
மடிகொன்று பால்கொளலு மாண்பே—குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல. 14

முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப வுடுத்துண்ப வுண்ணு—இடித்திடித்துக்
கட்டுரை கூறிற் செவிக்கொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம். 15

ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோ டுணையாத் தெரிதந்தும்—குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று. 16

ஏதிலார் யாதும் புகல விறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு—நேர்நின்று
காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு. 17

கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி
தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெரும்மூச் செறிந்து. 18

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறா—ஆங்கது கொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று. 19

உறுதி பயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறு முயல்ப—இறுமுயிர்க்கும்
ஆயுண் மருந்தொழுக்க றீதன்றா லல்லனபோல்
ஆவனவு முண்டு சில. 20

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். 21

சிறிய பகையெனினு மோம்புத றேற்றார்
பெரிதும் பிழைபா டுடையர்—நிறைகயத்
தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது. 22

புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறுதல் வேண்டும்—கழிபெருங்
கண்ணோட்டஞ் செய்யேல் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து. 23

மனத்த கறுப்பெனி னல்ல செயினும்
அனைத் தெவையுந் தீயவே யாகும்—எனைத்துணையும்
தீயவே செய்யினு நல்லவாக் காண்பவே
மாசின் மனத்தி னவர். 24

இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே—அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும். 25

நல்லா ரொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னாவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ். 26

பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளும்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா—முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயா திரா. 27

வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல—கொன்னோ
அருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப் படான். 28

ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்
ஓகோ கொடிது கொடிதம்மா—நாகொன்று
தீவினைக் கம்மியனால் வாய்பூட் டிடப்படின்மற்
றுவா லிவரென்செய் வார். 29

சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்
பெறுமெனிற் றாழ்வரோ தாழார்—அறனல்ல
எண்மைய வாயினுங் கைவிட் டரிதெனினும்
ஒண்மையிற் றீர்ந்தொழுக லார். 30

செயக்கடவ வல்லனவுஞ் செய்துமன் னென்பார்
நயத்தகு நாகரிக மென்னும்—செயிர்த்துரைப்பின்
நெஞ்சுநோ மென்று தலைதுமிப்பான் றண்ணளிபோல்
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று. 31

பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனுக் கொள்வான்—பயமின்று
மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக் கொல்
கைவிதிர்த் தஞ்சப் படும். [வான்போல் 32

தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்—தெய்வம்
இலதென்பார்க் கில்லை தமின்புதல்வர்க் கன்றே
பலகாலுஞ் சொல்வார் பயன். 33

தீய செயல்செய்வா ராக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல—தீயன
நல்லன வாகாவா நாவின் புறநக்கிக்
கொல்லுங் கவயமா போல். 34

வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு. 35

மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்கும்—கழிமுடைப்
புன்புலா னூற்றம் புறம்பொதிந்து மூடினும்
சென்றுதைக்குஞ் சேயார் முகத்து. 36

## அறநெறிச்சாரம்.

காலைச்செய் வோமென் றறத்தைக் கடைப்பிடித்துச்
சாலச்செய் வாரே தலைப்படுவார்—மாலை
கிடந்தா னெழுத லரிதான்மற் றென்கொல்
அறங்காலை செய்யாத வாறு. 37

சென்றநா ளெல்லாஞ் சிறுவிரல்வைத் தெண்ணலாம்
நின்றநாள் யார்க்கு முணர்வரி—தென்றொருவன்
நன்மை புரியாது நாளுலப்ப விட்டிருக்கும்
புன்மை பெரிது புறம். 38

பட்ட வகையாற் பலரும் வருந்தாமல்
கட்டுடைத் தாகக் கருதிய நல்லறம்
மூட்டுடைத் தாக விடைதவிர்ந்து வீழ்தலில்
நட்டரு னுதலே நன்று. 39

பலகற்றேம் யாமென்று தற்புகழ வேண்டா
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங்—காக்கும்
சிலகற்றார் கண்ணு முளவாம் பலகற்றார்க்
கச்சாணி யன்னதோர் சொல். 40

தன்னைத்தா னெஞ்சங் கரியாகத் தானடங்கின்
பின்னைத்தா னெய்தாப் பயனில்லை—தன்னைக்
குடிகெடுக்கு நெஞ்சிற்குத் தற்றேவல் செய்யின்
பிடிபடுக்கப் பட்ட களிறு. 41

நின்னை யறப்பெறு கிற்கிலே னன்னெஞ்சே
பின்னையான் யாரைப் பெறுகிற்பேன்—நின்னை
அறப்பெறு கிற்பேனேற் பெற்றேன்மற் றீண்டு
துறக்கந் திறப்பதோர் தாள். 42

உள்ளு ரிருந்துந்த முள்ளமறப் பெற்றாரேல்
கள்ளவிழ் சோலையாங் காட்டுளார்—காட்டுள்ளும்
உள்ள மறப்பெறு கல்லாரே நாட்டுள்ளும்
நண்ணி நடுவூரு ளார். 43

காய்த லுவத்த லகற்றி யொருபொருட்கண்
ஆய்த லறிவுடையார் கண்ணதே—காய்வதன்கண்
உற்ற குணந்தோன்றா தாகு முவப்பதன்கண்
குற்றமுந் தோன்றா கெடும். 44

விருந்து புறந்தரான் வேளாண்மை செய்யான்
பெருந்தக் கவரையும் பேணான்—பிரிந்துபோய்க்
கல்லான் கடுவினை மேற்கொண் டொழுகுமேல்
இல்வாழ்க்கை யென்ப திருள். 45

அட்டுண்டு வாழ்வார்க் கதிதிக ளென்ஞான்றும்
அட்டுண்ணு மாட்சி யுடையவர்—அட்டுண்டு
வாழ்வார்க்கு வாழ்வா ரதிதிக ளென்றுரைத்தல்
வீழ்வார்க்கு வீழ்வார் துணை. 46

மருவிய காதன் மனையாளுந் தானும்
இருவராய்ப் பூண்டிய்ப்பி னல்லால்—ஒருவரால்
இல்வாழ்க்கை யென்னு மியல்புடைய வான்சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று. 47

நாற்றமொன் றில்லாத பூவொடு சாந்தினை
நாற்றந்தான் வேண்டி யதுபோலும்—ஆற்ற
மறுவறு சீலமு நோன்புமில் லாரை
உறுபயன் வேண்டிக் கொளல். 48

இம்மை யடக்கத்தைச் செய்து புகழாக்கி
உம்மை யுயர்கதிக் குய்த்தலான்—மெய்ம்மையே
பட்டாங் கறமுரைக்கும் பண்புடை யாளரே
நட்டா ரெனப்படு வார். 49

வைகலு நீருட் கிடப்பினுங் கல்லிற்கு
மெல்லென்றல் சால வரிதாகு மஃதேபோல்
வைகலு நல்லறங் கேட்பினுங் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னு நெஞ்சு. 50

பாம்புண்ட நீரெல்லா நஞ்சாம் பசுவுண்ட
தேம்படு தெண்ணீ ரமுதமாம்—ஓம்பற்
கொளியா முயர்ந்தோர்க்கு ஞான மதுபோல்
களியாங் கடையாயார் மாட்டு. 51

கல்லா வொருவனைக் காரணங் காட்டினும்
இல்லைமற் றென்று மறனுணர்தல்—நல்லாய்
நறுநெய் நிறைபுழுக்க லுய்ப்பினு மூழை
பெறுமோ சுவையுணரு மாறு. 52

கட்டளை கோடித் திரியிற் கருதிய
இட்டிகையுங் கோடு மதுபோலும்—ஒட்டிய
காட்சி திரியி னறந்திரியு மென்றுரைப்பர்
மாட்சியின் மிக்கவர் தாம். 53

கெடுக்கப் படுவது தீக்கரும நாளும்
கொடுக்கப் படுவ தருளே—அடுத்தடுத்
துண்ணப் படுவது நன்ஞான மெப்பொழுதும்
எண்ணப் படுவது வீடு. 54

திரையவித்து நீரா டலாகா வுரைப்பார்
உரையவித் தொன்றுஞ்சொ லில்லை—அரைசராய்ச்
செய்துமா மென்னினு மாகா துளவரையால்
செய்தவர்க்கே யாகுந் திரு. 55

உப்புக் குவட்டின் மிசையிருந் துண்ணினும்
இட்டுணுக் காலது கூராதாம்—தொக்க
உடம்பும் பொருளு முடையானோர் நன்மை
தொடங்காக்கா லென்ன பயன். 56

இன்சொல் விளைநிலனு வீதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை யெருவட்டி
அன்புநீர் பாய்ச்சி யறக்கதி ரீனவோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய். 57

குற்றத்தை நன்றென்று கொண்டு குணமின்றிச்
செற்ற முதலா வுடையவரைத்—தெற்ற
அறிந்தாரென் றேத்து மவர்களைக் கண்டால்
துறந்தெழுவார் தூய்க்காட்சி யார். 58

உணர்ச்சியச் சாக வுசாவண்டி யாகப்
புணர்ச்சிப் புலனைந்தும் பூட்டி—உணர்ந்ததனை
ஊர்கின்ற பாக னுணர்வுடைய னாகுமேல்
பேர்கின்ற தாகும் பிறப்பு. 59

## பழமொழி.

கல்வியா னாய கழிநுட்பங் கல்லார்முன்
சொல்லிய நல்லவுந் தீயவாம்—எல்லாம்
இவர்வரை நாட தமரையில் லார்க்கு
நகரமுங் காடுபோன் றாங்கு. 60

நன்கொன் றறிபவர் நாழி கொடுப்பவர்க்
கென்று முறுதியே சூழ்க வெறிதிரை
சென்றுலாஞ் சேர்ப்ப வதுபோல நீர்போயும்
ஒன்றிரண்டாம் வாணிக மில். 61

நாடி நமரென்று நன்குபுறந் தந்தார்க்குக்
கேடு பிறரோடு சூழல் கிளர்மணி
நீடுகல் வெற்ப நினைப்பின்றித் தாமிருந்த
கோடு குறைத்து விடல். 62

இன்றி யமையா விருமுது மக்களும்
பொன்றினமைகண்டும் பொருள் பொருளாக் கொள்ப
ஒன்றும் வகையா னறஞ்செய்க வூர்ந்துருளின் [வோ
குன்றும் வழிதடுப்ப தில். 63

மாய்வதன் முன்னே வகைப்பட்ட நல்வினையை
ஆய்வின்றிச் செய்யாதார் பின்னை வழிநினைந்து
நோய்காண் பொழுதி னறஞ்செய்வார்க் காணுமை
நாய்காணிற் கற்காணு வாறு. 64

தமரேயுந் தம்மைப் புகழ்ந்துரைக்கும் போழ்தில்
அமரா ததனை யகற்றலே வேண்டும்
அமையாரும் வெற்ப வணியாரே தம்மைத்
தமவேனுங் கொள்ளாக் கலம். 65

மறுமனத்தா னல்லாத மாநலத்த வேந்தன்
உறுமனத்த னாகி யொழுகின்—செறுமனத்தார்
பாயிரங் கூறிப் படைதொக்கா லென்செய்ப
ஆயிரங் காக்கைக்கோர் கல். 66

கற்றறிந்தார் கண்ட தடக்க மறியாதார்
பொச்சாந்துந் தம்மைப் புகழ்ந்துரைப்பார்—தெற்ற
அறைகல் லருவி யணிமலை நாட
நிறைகுட நீர்தளும்ப லில். 67

கோவாத சொல்லுங் குணனில்லா மாக்களை
நாவா யடக்க லரிதாகும்—நாவாய்
களிகள்போற் றூங்குங் கடற்சேர்ப்ப வாங்கி
வளிதோட் கிடுவாரோ வில். 68

உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை
அடக்கமி லுள்ளத்த னாகி—நடக்கையில்
ஒள்ளிய னல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக்
கொள்ளி கொடுத்து விடல். 69

எண்ணக் குறைபடாச் செல்வமு மிற்பிறப்பும்
மன்ன ருடைய வுடைமையும்—மன்னரால்
இன்ன ரெனல்வேண்டா விம்மைக்கு மும்மைக்கும்
தம்மை யுடைமை தலை. 70

அருமை யுடைய பொருளுடையார் தங்கண்
கரும முடையாரை நாடார்—எருமைமேல்
நாரை துயில்வதியு மூர குளந்தொட்டுத்
தேரை வழிச்சென்று ரில். 71

பொல்லாது சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்—நல்லாய்
மணலின் முழுகி மறைந்து கிடக்கும்
நுணலுந்தன் வாயாற் கெடும். 72

மிக்குப் பெருகி மிகுபுனல் பாய்ந்தாலும்
உப்பொழிதல் செல்லா வொலிகடல்போல்—மிக்க
இனநல நன்குடைய வாயினு மென்றும்
மனநல மாகாவாங் கீழ். 73

முறை தெரிந்து செல்வர்க்கு நல்கூர்ந் தவர்க்கும்
இறைதிரியா நேரொக்கல் வேண்டும்—முறைதிரிந்து
நேரொழுகா னாயி னதுவா மொருபக்கம்
நீரொழுகிப் பாலொழுகு மாறு. 74

புன்சொல்லு நன்சொல்லும் பொய்யின் றுணர்கிற்பார்
வன்சொல் வழியராய் வாழ்தலு முண்டாமோ
புன்சொ லிடர்ப்படுப்ப தல்லா லொருவனை
இன்சொ லிடர்ப்படுப்ப தில். 75



AVE MARIA PRESS, HARRIS ROAD, EGMORE.

*MADRAS SCHOOL SERIES.*



# SECOND FORM READER,

## TAMIL.

## இரண்டாம் பாட புத்தகம்.

AUTHORIZED BY THE DIRECTOR OF PUBLIC INSTRUCTION.

First Edition, 10,000 Copies.



Madras:

PUBLISHED BY THE

EMPRESS OF INDIA PRESS, POPHAM'S BROADWAY, BLACK TOWN.

1895.



